# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி - கார்த்திகை - 2024 - டிசம்பர் | இணைய வழி - மலர் - 2 - இதழ் - 4



உலகின் மிகப்பெரிய ரிஷப வாகனத்தில்

உண்ணாமலை அம்பாள் உடனுறை அருணாச்சலேஸ்வரர்

# திருநெல்லை

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி – கார்த்திகை

2024–டிசம்பர்

இணையவழி மலர் 2 – இதழ் 4

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

04565-236846

94433 37011

இணைய அச்சாக்கம்

தீபா ராஜேஸ்வரி

கோவிலூர்


## பொருளடக்கம்

பக்கம்

# ஆசியுரை



சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

எல்லாம் வல்ல பரம்பொருளின் துணையால் பற்பல அற்புதங்களும், அருள் செயல்பாடுகளும் நாள்தோறும் நிகழ்ந்து வருகின்றன. இந்த மாதத்தில் காசி, திருவண்ணாமலை போன்ற இடங்களில் நமக்குக் கிடைத்த அருள் அனுபவங்கள் எண்ணி எண்ணி வியக்கத்தக்கன. நமக்கு மட்டும் இல்லாது நம்முடன் இணைந்து வருகை தந்த பலருக்கும் இவ்வருள் அனுபவங்கள் கிடைத்தன. இதைப் படிக்கின்ற உங்களுக்கும் இந்த அருள் அனுபவம் கிடைக்க அருள்மிகு விசுவநாதர் துணையை வேண்டுகிறாம்.

## காசி ஸ்ரீ விசுவநாதர் திருக்கோயில் அறக்கட்டளையும் கோவிலூர் மடமும் இணைந்து வழங்கும் அன்னதானம்

காசியில் நாளொன்றுக்கு ஐயாயிரம் பேருக்கு உணவு வழங்கும் திட்டத்திற்குக் காசி ஸ்ரீ விசுவநாதர் ஆலயத்தின் நிர்வாகத்தின் வழியாகக் கோவிலூர் மடாலயத்திடம் உதவி வேண்டப்பெற்றது. அதனை ஏற்று பற்பல நிலைகளில் உதவிகளைச் செய்து தரமான, உடலுக்கு ஏற்ற, மதிய உணவு அன்னதானத்தை நம் மேற்பார்வையில் சிறப்புடன் செயலாற்றி வருகிறோம். தற்போது கோவிலூர் மடத்தினை பங்குதாரராக ஏற்று, ஸ்ரீ காசி விசுவநாதர் ஆலய நிர்வாகம் சிறப்பித்துள்ளது. இதன் மூலம் காசி ஸ்ரீ விசுவநாதர் ஆலயத்தோடு இணைந்து (Collaborative charity) என்ற செயலாற்றும் முறைமையை காசி விசுவநாதர் நமக்கு வழங்கியுள்ளார்.

இதைச் செயல்படுத்தும் விதமாக, காசியில் வேதம் பயிற்றுவிக்கும் பாடசாலைகளில் பயிலும் மாணவர்கள், மாணவிகள், வேத வித்துக்கள் போன்ற சுமார் எழுநூறு பேருக்குக் காசி ஸ்ரீ விசுவநாதர் திருக்கோயில் டிரஸ்ட் , மற்றும் கோவிலூர் மடம்

வழியாக அன்னதானம் சிறப்புடன் செய்யப்பெற்று வருகின்றது. இது தவிர காசியில் உள்ள Banaras Hindu University Hospital ,புற்றுநோய் மருத்துவமனை ஆகிய இடங்களிலும் சுமார் ஆயிரத்து ஐநூறு பேருக்கு அன்னதானம் செய்யப்பெற்று வருகிறது.

எதுவும் நாம் நினைத்து நடப்பதில்லை. ஆண்டவன் அருள் கருணை வழிகாட்டுகிறது. நாம் அந்த வழியில் செல்கிறோம். காசியில் நடைபெறும் அன்னதானத்தில் காசி விசுவநாதர் திருக்கோயில் டிரஸ்டுடன் இணைந்து பணியாற்றுவது என்பது யாருக்கும் கிடைக்காத அருள் பணியாகும். இதனைச் செம்மையுடன் செய்ய காசி ஸ்ரீ விசுவநாதர் துணை செய்வார்.

**காசியை நினைக்க முத்தி காசி என்று உரைக்க முத்தி**

**காசியைக் காண முத்தி காசியைச் சூழ முத்தி**

**காசியில் வசிக்க முத்தி காசியைக் கேட்க முத்தி**

**காசியின் வசிப்போர் தம்மைக் கண்டு தாழ்ந்திடுதல் முத்தி**

என்று காசி மாகத்மியம் குறிப்பிடுகிறது.

காசியில் காலை ஏழு மணி முதல் பதினோரு மணி வரை இந்த அன்னதானப் பணிகளைச் செய்ய, அன்பர்களை அழைக்கிறோம். இவ்வாறு காசியில் தங்கி காசி கோயில் டிரஸ்ட் மற்றும் மடமும் இணைந்து நடத்தும் அன்னதானத்தில் சேவை செய்பவர்களுக்கு அவர்கள் எத்தனை நாள் தொண்டு செய்கிறார்களோ அத்தனை நாளும் காசி விசுவநாதர் தரிசனம் செய்ய திருக்கோயில் நிர்வாகம் ஒப்புக் கொண்டுள்ளது.

மேலும் சப்தரிஷி பூசை போன்றவற்றையும் கட்டணமின்றி தரிசிக்கலாம். காசியைச் சுற்றியுள்ள இருபத்தைந்துக்கும் மேற்பட்ட இடங்களையும் சுற்றிப் பார்க்க வாய்ப்பு செய்து தரப்படும். தொண்டு செய்ய வருபவர்கள் காசிக்கு உரிய பயணச் சீட்டு, தங்குமிடம் போன்றவற்றை கவனித்துக்கொண்டால் போதுமானது.

நமது கோவிலூர் மடம் காசியில் அசிகாட் என்ற பகுதியில் அமைந்திருக்கிறது. இங்கும் நாள்தோறும் சுமார் முன்னூறு பேருக்கு அன்னதானம் செய்யப்படுகிறது. இது குறித்து தனிநபர் பலர் படமெடுத்து பதிவு செய்துள்ளனர்.

இந்த அன்னதானத்தில் கலந்து கொள்ள நாளொன்றுக்கு ரூ 5000 செலுத்தலாம். இதற்கான வங்கி விபரம்

**SANATANA DHARMA WORLD UNIVERSITY TRUST,**

**ICICI BANK, KARAIKUDI MAIN BRANCH,**

**A/C NO. 606901175145, IFSC: ICIC0006069**

இவை அனைத்திலும் கோவிலூர் மடம் மட்டும் பங்கேற்றுப் புண்ணியம் பெற இயலும். இருந்தாலும் இப்பணிகளில் அன்பர்கள் பலரையும் பங்கேற்க வைத்து அவர்களும் புண்ணியங்கள் பல பெறவே இந்த இனிய அரிய வாய்ப்புகள் ஏற்படுத்தப்படுகின்றன.

காசியில் நடைபெறும் அருட் காட்சிகளை நினைப்போம். காசி காசி என்று உச்சரிப்போம். காசி காசி என்று கேட்போம். நிதானமாக காசியைக் காண, காசியைச்

சூழ, காசியில் வசிக்க, காசியில் வசிப்போருக்குத் தொண்டு செய்ய, காசியில் அன்னதானம் செய்ய நமக்கு வழி கிடைக்கும். அவ்வழிக்குக் கோவிலூர் மடத்தினைத் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

## காசி விசுவநாதர் கோவிலில் நாம் கலந்து கொண்ட ருத்ராபிஷேகங்கள்

இந்த அன்னதானப்பணிகளை நேரடியாகச் சென்று பார்த்துவர அடிக்கடி நாம் காசி பயணம் மேற்கொள்ள வேண்டியுள்ளது. காசி ஸ்ரீவிசுவநாதர் ஆலய அன்பர் ஒருவர் சொன்னதுபோல நம்மைக் காசி விசுவநாதர் அதிகம் ஈர்க்கிறார். இம்மாதப் பயணத்தின்போது பல அனுபவங்கள். இம்முறை பன்னிரண்டு நாட்கள் காசியில் தங்க வேண்டிய நல்லனுபவம் கிடைத்தது. இக்காலத்தில் ருத்ர அபிஷேகம், சப்தர ரிஷி பூசை, சம்போ என்று பல தரிசனங்கள் காசியில் நமக்குக் கிடைத்தன. ருத்ர அபிஷேகம் என்பது காசி விசுவநாதர் திருக்கோயிலில் மூத்த விசுவநாதருக்கு (அவிமுக்தர் ) அமர்ந்து செய்யும் அபிஷேகம் ஆகும். மாட்டின் கொம்பு போன்ற உலோக வடிவப் பாத்திரத்தில் அபிஷேகப் பொருள்கள் நிரப்பப்பட்டு அதனை ஆண்டவனுக்கு அவர் மேனி குளிரும் வண்ணம் செய்யப்படும் சிறந்த அபிடேகம் ஆகும். அவனருளால் அவன் தாள் வணங்கும் அற்புதம் நமக்கு திருக்கோவில் அழைப்பின் மூலம் இரண்டு முறை கிடைத்தது. பெரிய இந்நிகழ்வில் எம்மையும் ஒரு பொருளாக்கிய எம்பிரான் அருளை எண்ண எண்ண வியப்பளிக்கிறது. இவ்வாறு நாளும் திருநாளாக நமக்கு காசி அனுபவம் அமைந்து வருகிறது.

## திருப்பதியில் நடைபெறும் உலக அளவிலான கோயில்கள் இணைப்புக் கருத்தரங்கம் (INTERNATION-AL TEMPLES CONVENTION &EXPO)

உலக அளவில் அமைந்துள்ள திருக்கோயில்களை இணைத்து ஒரு கருத்தரங்கம் திருப்பதியில் பிப்பரவரி மாதம் 17 முதல் 19 வரை நடைபெற உள்ளது. இதில் நமது தமிழ்நாட்டைச் சேர்ந்த அனைத்துக் கோயில் சார்ந்த அன்பர்களும் பங்கேற்க வேண்டும். குறிப்பாக கோயில் தர்மங்களைச் செய்து வரும் நகரத்தார் பெருமக்கள் கலந்து கொள்ளவேண்டும். இதன் வழியாக உலக அளவிலான சந்திப்பு, கோயில்களின் வழிபாடு மற்றும் நிர்வாகக் கலந்துரையாடல், கோயில் பாதுகாப்பு, கோயில் நிதிவளம் போன்றன பற்றிய அரிய தகவல்கள் பரிமாறப்படும். உலக அளவில் நகரத்தார் கோயில்களுக்கு இணைப்பு கிடைக்கும். இதற்காக நகரத்தார் திருக்கோயில் அன்பர்களுடன் தொலைபேசியில்

தகவல் தெரிவிக்கப்பட்டு அழைக்கப்பெற்றுள்ளது. இக்கருத்தரங்கில் கோவிலூர் மடாலயத்திற்குச் சிறப்பான தகுதி வழங்கப்பெற்றுள்ளது. இதனை ஏற்று நாம் அனைவரும் இந்தத் திருக்கோயில் இணைப்புக் கருத்தரங்கில் கலந்து கொள்வோம்.

### திருவண்ணாமலை தீப தரிசனம், திவ்ய தரிசனம்

கார்த்திகை மாதம் தீப ஒளி மாதம் ஆகும். பெரிய கார்த்திகை எனப்படும் திருவண்ணாமலை தீபத் திருவிழா சிறப்புடன் இவ்வாண்டும் நடைபெற்றது. இனிய தீபக்காட்சியை மனம் குளிரக் கண்டு உலக அமைதி வேண்டினோம். நகரத்தார்களுக்கு இம்முறை சில பல தடங்கல் ஏற்பட்டாலும் நிறைவில் அவனருளால் நன்மை விளைந்தது. திருக்கோயிலுடன் நல்லுறவை, நாள்தோறுமான உறவை நகரத்தார்கள் பேணிக் காக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்து இனி நாம் செயல்படவேண்டும். கார்த்திகைக்கு மட்டும் கோயிலைத் தொடர்பு கொள்வது என்று இல்லாமல் நாள்தோறும் திருவண்ணாமலைத் திருப்பணியை ஏற்றுச் செய்தல் வேண்டும்.

### கம்பவாரிதி இலங்கை ஜெயராஜ் அவர்களின் வருகை

தமிழ் அமுதம் அளிக்கும் கம்பவாரிதி இலங்கை ஜெயராஜ் அவர்கள் நமது மடாலயத்திற்கு டிசம்பர் மாதம் 20,21,22 ஆகிய நாட்களில் வருகை தந்துச் சிறப்பித்தார்கள். அவருக்கு தேவாரம், திருவாசகம், மங்கல

வாத்தியம் முழங்க, பூரண கும்ப மரியாதை செய்து வரவேற்கப்பெற்றது. அவர் நம்மோடு கலந்துரையாடியும் நமது கல்வி நிறுவனங்களின் ஆசிரியர்களுடன் உரையாடியும் மகிழ்ந்தார். இனிக்கும் இலக்கியம் கோவிலூர் பூமியை நிறைத்தது.

### ஆருத்ரா தரிசனம்

கோவிலூர் தென் சபாநாயர் ஆலயத்தில் மார்கழித் திங்களில் பல நிகழ்ச்சிகள் நடந்து வருகின்றன. அதில் முக்கியமான ஒன்று ஆருத்ரா தரிசனம். அதைச் சிறப்புடன் நடத்த ஏற்பாடு செய்யப் பெற்றுள்ளது. இதற்கு அன்பர்கள் பெருமளவில் வந்து கலந்துகொண்டுச் சிறப்பிக்க வேண்டுகிறோம்.

அனைவரும் ஆங்கிலப் புத்தாண்டு வாழ்த்தும், ஆசியும். என்றும் ஞான வழிப் பாதை நாடி நாம் செல்வோம்.

## நல்வழி பாடல்கள்

சேவித்தும் சென்று இரந்தும் தெண்ணீர்க் கடல்கடந்தும்

பாவித்தும் பார் ஆண்டும் பாட்டிசைத்தும் – போவிப்பம்

பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால்

நாழி அரிசிக்கே நாம்

**விளக்கம்:**

பிறரை வணங்குவதும், அடுத்தவரிடம் சென்று இரங்கி உதவி கேட்பதும் எதற்காக? உறவுகளை விட்டு அகலமான கடல் கடந்து செல்வதும் எதற்காக? தன் இயல்பான பழக்க வழக்கங்களைக் கொள்கைகளை மாற்றி தனக்கு உதவி புரியும் மனிதரோடு இணைந்து செல்வது எதற்காக? பலரையும் நல்லவர், வல்லவர் என்று பொய்யாகப் புகழ்ந்து பாடுவதும் எதற்காக? எல்லாம் இந்த வயிற்றுக்காகத்தான். ஒரு சான் வயிறை நிரப்ப உள்ள நாழி அரிசி சோறு பெறுவதற்காக இத்தனை பாடு பட வேண்டி உள்ளது.

## கோவிலூரின் கதை - 12

# சீர் வளர் சீர்
# சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்



சீர் வளர் சீர்
மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்
வரலாறு
(13ம் பட்டம்)



- முனைவர் மு.பழனியப்பன்
தமிழ்த்துறைத் தலைவர்,
அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
திருவாடானை

### காரைக்குடியில் கல்விக்குடி

காரைக்குடியில் பிறந்து, டெல்லி வரை சென்று பணியாற்றியவர் திரு. மெய்யப்பன் அவர்கள். காரைக்குடியில் மெ. மெ குடும்பத்தில் மெய்யப்பன், அழகம்மை ஆகியோருக்கு மகனாக மெய்யப்பன் பிறந்தார்.

இளவயதிலேயே தந்தை இறைநிழல் அடைய தாயின் அரவணைப்பில் வளர்ந்தார். காரைக்குடியில் உள்ள ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் பள்ளியில் தன் பள்ளிப்படிப்பினைப் படித்தார். அக்காலத்தில் நடைபெற்ற கம்பன் விழாக்களில் இவர் கலந்து கொண்டு கம்பன் அடிப்பொடி திரு சா. கணேசனாருடன் தொடர்பு ஏற்பட்டு இலக்கிய ஆர்வம் கொண்டார். காரைக்குடி அழக்கப்பா கல்லூரியில் நிலவியல் துறையில் இளநிலைப் பட்டத்தையும், சென்னை மாநிலக் கல்லூரியில் முதுநிலை நிலவியல் பட்டத்தையும் முடித்துப் பேராசிரியராகத் தூத்துக்குடியில் பணியாற்றினார். திருக்குறள் கழகத்திலும் இவரின் இலக்கியப் பணி தொடர்ந்தது.

## இந்தியத் தலைநகரில் கோவிலூரின் ஆன்மீகப் பணி

அதன்பின் ஒசூரில் உள்ள ஆசியன் பேரிங்க்ஸ் குழுமத்தில் இவரின் பணி பல்லாண்டுகளாகத் தொடர்ந்தது. இதன் பிறகு டெல்லியில் உள்ள எக்கம் குழுமத்திலும் இவரின் பணி தொடர்ந்தது. டெல்லியில் பணிபுரிந்த காலத்தில் கோவிலூர் ஆதீனகர்த்தர் சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகளின் அறிமுகமும், அவருடன் இணைந்து ஆன்மீகப் பணியாற்றும் வாய்ப்பும் திரு. மெய்யப்பன் அவர்களுக்குக் கிடைத்தது. டெல்லி, ரிஷிகேஷ் ஆகிய இடங்களில் கோவிலூர் மடத்தின் கிளைகளை விரிக்க நாச்சியப்ப சுவாமிகள் எண்ணம் கொண்டார். இவ்விடங்களில் பல பணிகளைத் தன் மேற்பார்வையில் திரு. மெய்யப்பன் அவர்கள் செய்து வந்தார். குறிப்பாக ரிஷிகேஷ் மடம் சிறப்புடன் உருவாகவும் நடைபெறவும் திரு மெய்யப்பன் பெரிதும் உதவினார்.

நாச்சியப்ப சுவாமிகளைத் தன் ஆன்மீக வழிகாட்டியாகக் கொண்ட மெய்யப்பர், அவருடன் நெருங்கிய தொடர்புடையவராக விளங்கி, அவரின் தனி உதவியாளராகவும் தன் பணியைத் தொடர்ந்தார். கோவிலூர் தொடர்பு ஏற்பட்ட யாவரும் அம்மடத்தின் ஆன்மீகப் பணியில் தன்னை முழுவதும் ஈடுபடுத்திக் கொள்வர். அவ்வகையில் கோவிலூர் மடத்தின் ஆன்மீகப் பணிகளில் தன்னை முழுவதும் ஐக்கியப் படுத்திக் கொண்டு தன் வாழ்வில்

மெய்யைத் தேடினார் மெய்யப்பர்.

பழனி பாதயாத்திரை அருள் அனுபவம் உடைய மெய்யப்பர் அருள்பாடல்கள் புனைவதிலும் வல்லவர். ஆடுக ஊஞ்சல் என்ற அவரின் பாடல் இன்றும் பல பக்தர்கள் நாவில் செம்மடைப்பட்டி ஊஞ்சலின் போது பாடப்படுவதைக் கேட்கலாம். அவரின் இலக்கிய ஆர்வம் அவரைக் கவிஞராகவம், பின்னாளில் கட்டுரையாளராகவும் விளங்கவைத்தது. வேதாந்த கட்டுரைகளையும்,கம்பராமாயணக் கட்டுரைகளையும் எழுதி வந்தார். திருநெல்லை என்ற இதழைத் தொடங்கியவரும் இவரே. இலக்கியப் பூங்கா என்ற இலக்கிய நிகழ்ச்சியைக் கோவிலூர் மடத்தில் மாதம் தோறும் நடத்தினார்.

## கோவிலூர் தொடுப்பும், தொடர்வும்

நாச்சியப்ப சுவாமிகள் பரிபூரணம் அடைந்தபின் அவரின் ஆணைப்படி மெய்யப்பன் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகளாக அருள்பீடம் ஏறினார். மெய்யப்ப ஞான சுவாமிகள் 2011 ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் ஞான தேசிகராக கோவிலூர் மடத்தில் அமர்ந்தார்.

சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகள் தொடங்கிய பணிகளை எண்ணிய பணிகளைத் தொடர்ந்து இவர்நடத்தினார். தொடங்கப்பெற்ற கல்விக் கூடங்களைச் சிறப்பாக நடத்தவும், புதிதாக பல கல்விக் கூடங்களை ஏற்படுத்தவும் அவர் முனைந்தார். நீதிநூல்கள், காப்பியங்கள் பலவற்றை உரையுடன் வெளியிட்டார். வேதாந்த பாடங்களை நடத்தினார். அவற்றை படப்பதிவுகளாக ஆக்கினார். பழனி பாத யாத்திரை, செட்டிநாட்டுத் தாலாட்டு, பட்டினத்தார், நகரக் கோயில்கள் பற்றிய ஆவணப்படங்களைத் தயாரித்தார்.

கோவிலூர் மடத்தின் இருநூறாம் ஆண்டுவிழாவைச் சிறப்புடன் கொண்டாடினார். மடத்தின் சார்பில் குருபூசைகளை நன்முறையில் நடக்கச் செய்தார். கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் கலைக் கல்லூரிக்குச் செல்ல வசதியாக பாலம் ஒன்றை பெருமுயற்சியில் கட்டினார். ஆண்டவர், நாச்சியப்ப சுவாமிகளுக்குச் சிலைகளை அமைத்தார். இவ்வாறு பல பணிகள் செய்து வரும் நிலையில் அவரின் உடல் நலம் நலிவடைய ஆரம்பித்தது.

2023 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 17 ஆம் நாள் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் பரிபூரணம் பெற்றார். இதற்கு முன்னதாக அடுத்த பட்டமாக கோவிலூர் மடத்திற்கு விளங்க, திரு. நா. நாராயணன் அவர்களின் பெயர் உயிலில் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் எழுதி வைத்துள்ளார். அதன்படி தற்பொழுது கோவிலூர் ஆதீனத்தின் பதினான்காம் பட்டமாகத் துறவேற்று சீர் வளர் சீர் நாராயண ஞான தேசிக சுவாமிகள் அருளாட்சி புரிந்து வருகிறார். சற்குருவின் அருளாலும், குருமார்களின் அருளாலும் கோவிலூர் மடாலயப் பணிகள் மேலும் மேலும் உயர்ந்து சிறக்கும்.

சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிகர் அவர்கள் ஆதீனமாகப் பொறுப்பேற்று 2011 முதல் 2023 வரை கோவிலூர் மடாலயத்தின் ஆதீனகர்த்தராக, 12 ஆண்டுகள் சிறப்பாகச் செயல்பட்டு வந்தார். காரைக்குடியில் புகழ்பெற்ற குடும்பமான மெ.மெ. குடும்பத்தில் பிறந்தவர். பிள்ளையார்பட்டிக் கோவிலைச் சார்ந்தவர். காரைக்குடியில் உள்ள அழகப்பர் கலைக் கல்லூரியில் நிலவியல் துறையில் இளங்கலைப் பட்டம் பெற்றுப் பலகல்லூரிகளில் பேராசிரியராகப் பணியாற்றிப் பின்னாளில் கோவிலூர் மடாலயத்தில் மேலாளர் பொறுப்போடு மடாலயத்திலே உள்ள பலகல்வி நிறுவனங்களின் செயலராகவும் பணியாற்றியவர். சீர் வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிகரின் விருப்ப ஆவணத்தின்படி பதின்மூன்றாம் பட்டமாகப் பொறுப்பேற்று அருளாட்சி செய்து வந்தார். பள்ளியிலும் கல்லூரியிலும் பயிலும் பொழுதே சொற்பயிற்சி மன்றங்களில் பங்கு பெற்றவர். நல்ல தமிழ்க் கவிஞரும் ஆவார். பழனிப் பாதயாத்திரையில் அனைவரும் பாடுகின்ற “ஆடுக ஊஞ்சல் ஆடுகவே’ என்ற பாடல் இவர்கள் இயற்றியதே. திருநெல்லை என்ற ஆன்மீகத் திங்கள் இதழும், புதிய கலை அறிவியல் கல்லூரியும் இவரின் பெருமுயற்சியால் உண்டானவையே.

# நல்லன எல்லாம் தரும் சுந்தர காண்டம்

## திருவடி தொழுத படலம்

(52 பாடல்கள்)

**பகுதி-14 தொடர்ச்சி**



முனைவர் சரசுவதி இராமநாதன்,
பள்ளத்தூர்

### முன்னுரை

சுந்தரகாண்டத்தின் நிறைவான படலம் இது. 15ஆவது படலம். சுந்தரகாண்டத்தின் தனி கதாநாயகன் அனுமன். ஒவ்வொரு படலமும் அனுமனின் செயல்களே கடல் தாவு படலம். யார் கவிஞர்! அனுமன் ஊர் தேடு படலம். யார் தேடினார். அனுமன் காட்சிப்படலம். யார் காட்சி கண்டார்? அனுமன் அப்படிப் பார்த்தால் திருவடி தொழுத படலம்! யார் தொழுதார்? அனுமன் தான். யாருடைய திருவடியைத் தொழுதான். இராமனது திருவடிகளையா இல்லையே! "ஏந்தல் தன் மொய்கழல் தொழுதிலன்" எனக் கம்பர் தெளிவாகச் சொல்லிவிட்டாரே. இராமன் திருவடிகளை வணங்கவில்லை. அப்படியானால் சிறிய திருவடி அனுமன் தொழுத படலம் என்றால் யாரைத் தொழுதான்? "முளரி நீங்கிய தையலைத்" தொழுதான். எனவே திருவாகிய சீதையின் அடிகளைத் தொழுத படலம் என்பதே பொருள்,

### தோன்றினன் அனுமன்

'இலங்கையை விட்டு விரைவில் செல்வேன்' என நினைத்த அனுமன் ஒருமலை மீது நின்றான். ஓங்கி உலகளந்த உத்தமன் (திரி விக்கிரம அவதாரம்) போலப் பெரிதும் வளர்ந்து, விண்வழி புறப்பட்டான்! நன்றி மறவாத அனுமன் மைந்நாக மலையில் இறங்கி, இலங்கையில்



நடந்தவற்றைப் புகன்று விடை பெற்று மீண்டும் பயணம் தொடங்கினான். மகேந்திர மலையில் காலூன்றிய அனுமனைக் கண்ட குரங்குக் கூட்டங்கள் பெற்ற மகிழ்ச்சி கூறும் தரமா? தாய்ப்பறவை எப்போது வரும் எனக் காத்திருந்த பறவை குஞ்சுகள் போல வானரப்படை ஆரவாரம் செய்தன. அனுமன் முகத்திலிருந்து வந்த ஒளியை களிப்பைப் புரிந்து கொண்டு மேலும் மகிழ்ச்சியால் துள்ளின! வானரர் சிலர் அழுதனர், தொழுதனர், ஆரவாரம் செய்தனர், ஆடிப்பாடினர், அனுமனைத் தலைமேல் தூக்கி வைத்து ஆட ஆரம்பித்தனர். “அனுமனே உன் வரவு, உன் முகத்தில் தோன்றும் உவகை எல்லாம் எங்களுக்குப் புத்துணர்ச்சி தந்தன. முதலில் பழங்கள், கிழங்குகளை உண்பாயாக! என்றனர். மகிழ்ச்சியில் திளைத்த வானர வீரர்களின் உபசரிப்பில் திணறினான் வாயு மைந்தன்! அனுமனின் உடம்பில் இருந்த புண்களைப் பார்த்து வானரர் கலங்கிப் பெருமூச்சு விட்டனர்.

வாலிமைந்தனை வணங்கி, கரடித்தலைவன் ஜாம்பவானை வணங்கி, அனைவருக்கும் ஞாலநாயகன் தேவியாம் சீதாதேவி நல்வாழ்த்துச் சொன்னாள்” என்றான். வானரர் அனைவரும்



தீக்கிரையாக்கியதைச் சொல்லாமல் சொல்லிவிட்டன.

" பொருதமை புண்ணே சொல்ல, வென்றமை போந்த தன்மை

உணரசெய், ஊர்தீ யிட்டது ஓங்கிரும் புகையே ஓத,

கருதலர் பெருமை, தேவி மீண்டிலாச் செயலே காட்டத்

தெரிதர உணர்ந்தேம்! பின்னர் என் இனிச் செய்தும் என்றார்! (1256)

'புறப்படுவோம் ஸ்ரீராமனது மனத்துயரை ஆற்ற விரைவோம், அனுமன் முதலில் விரைந்து செல்க' என்றார்கள்.

எழுந்து கை கூப்பிச் சீதையை இங்கிருந்தே வணங்கினர். நடந்தவற்றை அனுமன் விவரித்தான்! சீதையைக் கண்டது, அடையாளம் சொன்னது, கணையாழி தந்தது, சூளாமணியைப் பெற்று வந்தது இவற்றைச் சொன்ன ஆஞ்சனேயன் போரிட்டதை, இலங்கையை எரித்த நிகழ்வை எல்லாம் சொல்லவில்லை. தற்புகழ்ச்சி யாகும் என்பதால்...!

ஆனாலும் அவன் உடலிலிருந்த புண்கள் அவன் பெரும்போர் செய்ததை உணர்த்திக்காட்டின. தென்திசையிலிருந்து தோன்றும் கரும்புகை அவன் ஊரைத்

## அங்கே, இராமனின் நிலை!

அரிய காதலின் பிரிவு என்பது ஒரு வடிவம் எடுத்தால் போலத் துயரமே வடிவாக நின்ற இராமன், சுக்ரீவா! மற்ற திசைகளிலிருந்து 'சீதை எங்கும் இல்லை' என்ற பதில் வந்தது. தென் திசைக்குச் சென்ற அனுமன் முதலானோர் வரவில்லையே! இறந்து போய் விட்டார்களா! நாம் சொன்ன ஒரு மாதக்கெடு முடிந்துவிட்டதே! எனக் கவலையுடன் பேசினான்.

‘மாண்டனள் அவள்; “இவள் மாண்ட வார்த்தையை
மீண்டு அவர்க்கு உரைத்தலின், விளிதல் நன்று” எனா,
பூண்டது ஓர் துயர் கொடு பொன்றினார் கொலோ?
தேண்டினர், இன்னமும் திரிகின்றார் கொலோ? (1264)

என ஏதேதோ புலம்பினான் காகுத்தன்! ஒருவேளை இராவணன் முதலான அரக்கரைக் கண்டு போர் செய்தனரோ! அரக்கரது மாயையால் இறந்து போயினரோ! சொர்க்கம் சேர்ந்தனரோ! அல்லது மீள முடியாமல் சிறை வைக்கப்பட்டனரோ! இராமனும், தலைவன் சுக்கிரீவனும் சொன்ன நாள் கடந்துவிட்டது. அவர் முகத்தை எப்படிப் பார்ப்பது எனத் தவம் செய்ய ஆரம்பித்தனரோ! சுக்ரீவா சொல்! எனப் புலம்பியவாறு கண் கலங்கி நின்றான் சீதாராமன்.

## வந்தான் அனுமன்

சூரியன் கிழக்கில்தானே தோன்றுவான். தென் திசையில் சூரியன் உதிப்பதுண்டா? ஆம்! அனுமன் ஒளிமயமாய்த் தெற்கில் தென்பட்டான். கண் மூடித்திறக்கும் முன் இவர்கள் பாதத்தடியில் வந்து நின்றனன். இராமனையோ, சுக்கிரீவனையோ வணங்கவில்லை. தென்திசையில் சீதையை நோக்கி வணங்கினான்.

‘எய்தினன் அனுமனும்; எய்தி ஏந்தல்தன்
மொய்கழல் தொழுதிலன்; முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன், கையினன்,
வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி வாழ்த்தினான்”. (1268)

வார்த்தைகளே தேவையில்லையே! சீதை தென்திசையில் இருக்கிறாள்; வணங்கத்தக்கவளாக இருக்கிறாள் எனச் சொல்லாமல் சொல்லிவிட்டான் அறிஞன் அனுமன். பல சொல்லக் காமுறுவர் அறிவிலிகள். சில சொல் பகவர்கர் அறிஞர். பேசாமலே குறிப்பால் உணர்த்துபவரும், உணர்பவரும், பேரறிஞர்கள்!” என்னையோ சுக்கிரீவனையோ வணங்காமல் உடம்பு நிலத்தில் படிய (எட்டு அங்கங்களும் தரையில்பட) வணங்குகிறான். அதுவும் தென்திசை நோக்கி வணங்குகிறான் என்றால் சீதை வணங்கத்தக்க கற்புக்கரசியாக விளங்குகிறாள் என்று தானே பொருள்!” கண்டதும் உண்டு, அவள் கற்பும் நன்று” என மகிழ்ச்சி ததும்ப முகம் மலர சுக்ரீவனைப் பார்க்கிறான் இராமன். இராமனின் தோள்கள் பருத்தன!

"கண்டனன், கற்பினுக் கணியைக் கண்களால்

தென்திரை அலைகடல், இலங்கைத் தென்நகர்

அண்டர் நாயக இனித் தவிர்தி ஐயமும்

பண்டுள துயரும் என்று அனுமன் பன்னுவான் (1271)

"சொல்லின் செல்வன்" என்று ஸ்ரீராமன் பட்டம் தந்தால் சும்மாவா! சொற்செல்வம் நிறைய உடைய அனுமன் அதை அளவறிந்து பயன்படுத்துகிறான். முதலில் வினைமுற்றுப் போட்டானே! கண்டனன் பார்த்துவிட்டேன்! என்றான். அதன்பின் யானா? எப்படி? எந்த நிலையில்? என்று வினா வரிசை வருமே! வராமல் "கற்பினுக்கணியை" என்றான் அனுமன். நான் கற்பினுக்கு அணிகலனான சீதையைப் பார்த்தேன் எப்படித் தெரியும்! என்பீர்களா! கண்களால் உடனே சிலர் சிரிப்பார்கள். அனுமன் மட்டும்தான் கண்ணால் பார்ப்பானா! நாமெல்லாம் எதனால் பார்ப்போம். அப்படியல்ல! ஆழமான பொருள் தரக் கண்களால் என்றான் அனுமன் விளக்கம் அடுத்த கட்டுரையில் பார்ப்போம்.

(தொடரும்)

# நல்வழி பாடல்கள்

நீரும் நிழலும் நிலம்பொதியும் நெற்கட்டும்

பேரும் புகழும் பெருவாழ்வும் – ஊரும்

வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமில்லார்க் கென்றும்

தரும்சிவந்த தாமரையாள் தான்

**விளக்கம்:**

பிறருக்கு துன்பம் செய்யாதவருக்கு, அடுத்தவர் அழிய வேண்டும் என்ற வஞ் சனை இல்லாதவருக்கு நல்ல நீர்வளம், நிழல் தரும் மரங்கள், நெல் வளம், பேரும், புகழும், சிறப்பான வாழ்க்கையும், நல்ல வீடும், தேவையான செல்வமும், நீண்ட ஆயுளும் செந்தாமரையில் அமரும் மஹாலக்ஷ்மி அருளுவாள்.

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்

கேடுகெட்ட மானிடரே கேளுங்கள் – கூடுவிட்டுங்(கு)

ஆவிதான் போயினபின் யாரே அனுபவிப்பார்

பாவிகாள் அந்தப் பணம்

**விளக்கம்:**

அடுத்தவருக்கு துன்பம் விளைவித்து, ஓடி ஓடி பணத்தைத் தேடி அதனை பாதுகாப்பாக வைப்பதாகக் கருதி மண்ணில் புதைத்து வைக்கும் மனிதர்களே கேளுங்கள், உங்கள் உயிர் பிரிந்து போகும் வேளையில் பணம் உங்களுடன் வராது, அதை யாரோ அனுபவிப்பார்கள், ஆதலால் உயிர் இருக்கும் போதே பணத்தை நல்ல காரியங்களுக்கு செலவு செய்யுங்கள்.

# எந்நாட்டவருக்கும் இறைவா போற்றி !

(பகுதி - 2)



டாக்டர் ஜெயபாலன் வள்ளியப்பன்,
ஈப்போ, மலேசியா

## சீனாவில் முருக வழிபாடு

"சிவனுக்கு பிரணவ மந்திரத்தை உபதேசித்ததாக", இந்தியாவில் இந்து மதம் கந்தனைப் போற்றுகின்றது. அதே போன்று, "புத்தருக்கு ஞானோபதேசம் செய்ததாக", சீனாவில் பௌத்த மதம், முருகனைப் போற்றுகின்றது.

பௌத்த மத வருகைக்கு முன்பே சீனாவில் முருக வழிபாடு இருந்து வந்துள்ளது. அதன் பின்னரே பௌத்தர்களும் தங்களுடைய போதி சத்துவ கந்தனைச் சீனர்களுக்கு அறிமுகப்படுத்துகின்றனர்.

நான்காம் நூற்றாண்டில் சீனாவில் உள்ள சென்சி மாகாணத்தில் உள்ள யாங் யாங் குகை சித்திரங்களில் ஆறு தலையும், ஆறு கைகளும், அந்த ஆறு கைகளிலே சூரியன், சந்திரன், வில், சேவல் மற்றும் முத்திரைகள் தாங்கிய ஆண் உருவம் ஒன்று மயில் மேல் இருப்பதை காணலாம். இந்தச் சிற்பத்திற்கு மஞ்சு ஸ்ரீ என்றும் மஞ்சு குமாரன் எனச் சீனர்கள் அழைக்கிறார்கள். இந்த மஞ்சு ஸ்ரீ என்ற கடவுளின் புராணக் கதை சூரசம்ஹாரத்தை நினைவுப்படுத்துகின்றது. ஆனால் இங்கே சூரனுக்குப் பதில் மரண தேவன் என்ற பெயரில் எமனை மஞ்சு குமாரர் சம்ஹாரம் செய்கின்றார். இதே குகையில் சிவ உருவங்களும் இருப்பது குறிப்பிடத்தக்கது.

சீனாவிற்கு பௌத்த மத வருகைக்குப் பின்பு நாம் முதலில் குறிப்பிட்ட வை துவ் பூ சா என்ற



போதி சத்துவ கந்தன் எல்லா பௌத்த ஆலயங்களிலும் காவல் தெய்வமாக வீற்றிருக்கின்றார். இந்த நிலையிலேயே திபத்திலும் கந்தக் கடவுள் பௌத்தர்களின் போதிசத்துவ கந்தனாகக் கொண்டாடப்படுகின்றார்.






வை துவ் பூ சா (போதிசத்துவ ஸ்கந்தன்) போதிசத்துவ ஸ்கந்தன்

வை துவ் பூ சா என்று சீன மொழியில் தருமத்தை நிலை நாட்டுபவர் என்று பொருள். மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே போகர் என்ற சித்தர் முருகனின் பெருமைகளைச் சீனர்களுக்குச் சொல்லி



அவர்களும் நாளடைவில் முருக வழிபாட்டைத் தொடர்ந்ததாகக் குறிப்புகள் உண்டு. “குவான் சே” என்ற கடலோர நகரத்தில் அன்றைய தமிழர்கள் வாணிபம் செய்ய போன பொழுது முருகனாலயத்தை அங்கே அமைத்ததாகவும் சொல்வார்கள்.

புத்த மதத்தில் இந்த வை துவ் பூ சா எனும் கந்தனைப் பற்றி ஒரு புராண கதை உண்டு. புத்த மதத்தைக் காக்கும் எண்மரில் போதி சத்துவ கந்தனும் ஒருவர். கௌதம புத்தர் தான் முத்தி அடையும் முன்னாலும் போதி சத்துவ கந்தனை அழைத்து புத்த தருமங்களை பாதுகாக்கும் மாறு கட்டளையிட்டார். போதி சத்துவ கந்தனும் புத்தரின் கட்டளைப்படி அவரது புனித நூல்களைச் சுமந்து இன்றைக்கு

ஆயிரம் ஆண்டுகள் பழமையான பைமா மடலாயத்தில் தங்கி புத்த தர்மங்களைப் பரப்பியாதாக ஐதிகம். பைமா என்றால் வெள்ளை குதிரை என்று பொருள். வெள்ளை குதிரையில் ஏறி போதி சத்துவ கந்தன் இங்கு வந்ததால் இதை





Skandadeva (Idaten)

போதிசத்துவ மடலாயம் என்றும் கூறுவர். இன்றைக்கும் பன்னிரண்டு அடி உயரத்தில் பைமா மடாலயத்தில் போதி சத்துவ கந்தனின் உருவ சிலைகள் இருப்பதைக் காணலாம்.

## ஜப்பானில் முருக வழிபாடு

ஜப்பானில் முருகனுக்கு ஈடாப்தேங் என்ற பெயரில் அமைதி தேவனாக வழிபடுகின்றார்கள். ஸ்கந்த தேவன் ஜப்பானிய மொழியில் ஈடாப்தேங் என்று மறுவியுள்ளது. முருகன் இங்கே மயில் மீது அமர்ந்துள்ள கோலம் காணப்படுகின்றது. முருகனை ஜப்பானியர்கள் அவர்கள் இயல்புகளோடு வழிபாடு செய்வதை இன்று நாம் காணலாம். அடிப்படையில் ஈடாப் தெங் என்ற அவர்களின் இறை உருவம் கந்தனின் இறை உருவத்தோடும் இயல்போடும் ஒத்து போவதைக் காணலாம்.

## கம்போடியாவில் முருக வழிபாடு

சீனா ஜப்பானைப் போலவே பண்டைய கம்போடியாவிலும் முருக வழிபாடு இருந்தது என்பதை, அங்குள்ள கல்வெட்டுகளில் காணமுடிகிறது. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஸ்கந்த கார்த்திகேயன் கற்சிலை ஒன்று கம்போடியாவில் அறியப்பட்டுள்ளது. மயில் மீது அமர்ந்த கந்தனின் திருக்கோலம் கம்போடியா டிராபிக்



மாவட்டத்தில் கடி அங் ஆலயத்தில் உள்ளது.

## பண்டைய ஜாவா தீவில் முருக வழிபாடு

ஜாவவைப் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் சாவகம் என்று குறிப்பிடுகின்றன. கி.பி.பதினான்காம் நூற்றாண்டில் ஜாவா என்கிற சாவகத்தை ஆபுத்திரன் ஆண்டதாகச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது. அதன் பின் ஜாவாவை ஆபுத்திரன் நாடு என்று அழைத்தார்கள். முருக வழிபாடு ஜாவாவில் ஆபுத்திரன் என்ற தமிழ் மன்னனால் அறிமுகப்படுத்தப் பட்டிருக்கலாம். பண்டைய ஜாவா தீவில் யுத்த கடவுள் என்று கார்த்திகேயேனை அழைகிறார்கள். முருகன் மார்பில் பூணூலுடன் மயில் மீது அமர்ந்திருக்கும் சிலையை ஜாவா தேசிய அருங்காட்சியகத்தில் உள்ளது. பாடாங் லேவாஸ் (Padang Lewas) மற்றும் நோம் நீயுமரா (Nomh Neumara) போன்ற இடங்களில் 1082 மற்றும் 1372 ஆண்டுகளைச் சேர்ந்த பழங்கால புத்த மத கட்டிடங்களில் உள்ள கல்வெட்டுகளில் பண்டைய கார்த்திகேய வழிபாடுகளின் சுவடுகள் கிடைத்துள்ளன.

இந்தோனசியாவிலுள்ள மற்ற இடங்களில் அவர்களின் புராணப்படி வாசுகி என்ற பாம்பின் வடிவத்தில் முருகனை வழிபடுகிறார்கள். இந்தோனசியா அருகில் உள்ள பிலிப்பைன்ஸ் நாட்டிலும் பழங்கால சேவல், வேல், மயில், காவடி போன்ற சின்னங்களை உடைய பொருட்கள் அகழ்வராய்ச்சியில் கிடைத்துள்ளன. இவற்றையெல்லாம் வைத்து பார்க்கும் பொழுது சங்க காலத்திற்கு முன்பிருந்து கடை சங்கம் முடிவு வரை அல்லது கி.பி. மூந்நூற்று ஐம்பது வரை தமிழகத் திலிருந்து வீசிய பண்பாட்டு அலையோடு முருக வழிபாடும் சேர்ந்து வந்ததைப் பார்க்கலாம்.

## ஈராகில் முருக வழிபாடு

ஈராக்கில் யாசிடி(சீணிஞீஞிமி) என்ற இன மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். அவர்களின் மத நம்பிக்கை கிருஸ்தவம் இஸ்லாம் என்று எதிலும் சேராத தனித்துவமான மத நம்பிக்கை. இவர்கள் ஆறாயிரம் ஆண்டு வரலாற்றை உடையவர்கள். ஈராக்கில் உள்ள குர்டிஸ்தான் நினைவு மாகாணத்தில் வாழ்ந்து வருகிறார்கள். இவர்களுகென்று கோவில் உண்டு. இவர்களின் கோவிலைத் தகர்பதற்கு முஸ்லிம்




மதவெறி இயக்கங்கள் பல தடவை முயற்சித்துள்ளனர். இவர்கள் இறைவனை மயில் தேவன் (peack cock god) என்ற வழிபடுகின்றார்கள். இறைவனை மாலிக் என்றும் அழைக்கிறார்கள். மாலிக் என்பது மலைக் கோவன் என்ற வார்த்தையின் திரிபு. இன்றைக்கும் விளக்கேற்றி திலகமிட்டு சேவல், மயில், மயிலின் காலில் மிதிப்படும் பாம்பு போன்றவற்றைப் புனித சின்னங்களாகக் கருதி வழிபடுகின்றார்கள். இவர்களின் இந்த வழிபாடு தமிழகத்தில் தோன்றிய முருக வழிபாட்டின் பிரதிபளிப்போ, தொடர்ச்சியோ அல்ல. தன்னிச்சையாக தோன்றியது. வட ஈராக்கில் வாழும் இந்த யாசிடி இனத்தவரை அவர்கள் பின்பற்றும் புராதன வழிபாட்டு முறைகளின் காரணத்தால் பல்வேறு தாக்குதலுக்கும் நெறுக்குதலுக்கும் உள்ளனார்கள். இதன் காரணமாக இவர்கள் சமீபத்தில் அப்கானிஸ்தான் நாட்டிற்கு இடம் பெயர்ந்தார்கள்.

## அராபியர்களின் முருக வழிபாடு

ஒருகாலத்தில் இந்தியா முதல் அரேபியா வரையில் தன்னிச்சையாக தொடங்கிய முருக வழிபாடு இருந்திருக்க வேண்டும். சில அரேபியர்கள் இஸ்லாமியராக மாறிய பின்னரும் முருகனை வழிபட்டு வந்திருக்கிறார்கள். அல் கதிர் (பச்சை மனிதன்) என்ற பெயரில் திருகுரானில் மிகுந்த ஞானமுள்ள இறை தூதனாக ஒருவரை







சித்தரிக்கின்றார்கள். இந்த அல் கதிர் ஒரு மீனின் மீது நிற்கும் ஞானியாகச் சித்தரிக்கப்படுகின்றார். முருகனுக்குக் கதிர்காமன் என்ற பெயரும் உண்டு. இலங்கையில் உள்ள கதிர்காமத்தில் இஸ்லாமியர் வழிபாடு செய்யும் வழக்கமும் உண்டு. அதே வேளையில், அல் கதிர் மசூதி என்ற பெயரில் கதிர்காமம் ஸ்ரீ லங்காவில் இருக்கின்றது.

அல் கதிர் பள்ளிவாசல் கதிர்காமம் ஆலயத்திற்கு அருகிலேயே இருக்கின்றது. மூவாயிரம் வருடங்களுக்கு முன்பு கோம் வட்டாரத்தில் மலை மீது அல்கதிர் என்ற பெயரில் ஒரு மசூதி காணப்படுகிறது. குமரன் கோமாக திரிந்தது. இது போல குகைகள் என்று இஸ்ரேலிலும் இருக்கின்றது. உஸ் பெஸ் கிஸ்தான் நாட்டில் சமர்க்கான்த் (போர் கந்தன்) என்ற இடத்திலும் அல்கதிர் என்ற மசூதி காணப்படுகிறது.

## சுமேரிய நாகரிகத்தில் முருக வழிபாடு

ஒரு காலத்தில், சுமேரிய மத்திய கிழக்கு நாடுகளில் திராவிட இனத்தைச் சேர்ந்தவர்கள் அவர்கள் கடவுளை பெஇல் (வேல்) மார்டுக் என்ற பெயரிலும் வழிபட்டு வந்தனர். இந்தச் சுமேரிய நாகரிகம் இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தது. புனித







பைபிளில் பின்வருமாறு ஒரு செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

"மக்களினத்தார் நடுவே அறி வியுங்கள்; பறைசாற்றுங்கள்; கொடியேற்றுங்கள்; முழக்கம் செய்யுங்கள்; "பாபிலோன் கைப்பற்றப்பட்டது; பேல் சிறுமையுற்றது; மெரோதாக்கு உடைக்கப்பட்டது; அதன் சிலைகள் சிறுமையுற்றன; அதன் உருவங்கள் உடைக்கப்பட்டன, "என்று மறைக்காமல் அறிக்கையிடுங்கள். ஏனெனில், வடக்கினின்று ஓர் இனம் அதை எதிர்த்துவரும். அது பாபிலோனைப் பாழாக்கும். ஒருவனும் அதில் குடியிருக்கமாட்டான். மனிதனும் விலங்கும் அங்கிருந்து தப்பியோடுவர்."

விவிலியம், எரேமியா (அதிகாரம் 502)

இந்தக் குறிப்பில் சொல்லப்படும் பேல் முருகனின் கை வேல். மார்டுக் சுமேரியர்களின் முருகன். சுமேரியாவில் மார்டுக் கடவுளுக்கு மிக முக்கியமான இடம் உண்டு. முழுமுதற் கடவுளாகவே மார்டுக்கை வழிபட்டு வந்தார்கள். கந்த புராணத்தைப் போலவே சுமேரியர்களுக்கும் புராணக் கதை உண்டு. முருகனுக்கு மயிலை போலவே மார்டுக் என்ற சுமேரிய தெய்வத்திற்கு தியாமட் என்ற டிரேகன் உண்டு. பண்டைய சுமேரிய முருக வழிபாடும் தமிழகத்திற்குத் தொடர்ச்சியில்லாத ஒரு தனி வழிபாடு ஆகும்.

## கிழக்கு ஆப்ரிகாவில் முருக வழிபாடு

கிழக்கு ஆப்ரிகாவில் இருபத்தி ஐந்து வகையான பழங்குடி மக்கள் முருங்கு என்ற பெயரில் அவர்களுடைய இறைவனை அழைக்கின்றனர். முருங்கு என்கின்ற கடவுளும் மலைகளிலும் குகைகளிலும் கோவில் கொண்டுள்ளதாகப் பதிவு செய்துள்ளனர். எகிப்து நாட்டில் ஆம் முன் ஆடு வாகனமாகவும், பாம்பு மயிலுடன் சேர்ந்த ஒரு வடிவமாகவும் அவர்களது பண்டைய இறைவடிவமே கருதினர். முருகனுக்கு ஆடும் ஒரு வாகனம் என்பது கந்த புராணச் செய்தி. ஆனால் இது கிழக்கு ஆப்ரிகாவில் உள்ள ஆம் முன் என்ற அவர்களின் முருக வழிபாட்டில் இடம் பெற்றது தன்னிச்சையான ஒன்று.





தன்னுடைய கொடியில் வைத்திருக்கின்றான்.

## நிறைவுரை

தமிழ் நாட்டில் நாம் முருகன் என்று வணங்கும் இறைவனை வட இந்தியாவில் கார்த்திகேயன் என்றும் பௌத்த மதத்தினர் போதி சத்துவ கந்தன் என்றும், இஸ்லாமிய மதத்தில் அல் கதிர் என்றும், இலங்கை கதிர்காமர் என்றும், சீனர்கள் மஞ்சு ஸ்ரீ அல்லது வை துவ் பூ சா என்றும் ஜப்பானியர்கள் ஈட தேங் என்றும் கொரியர்கள் வித சேயோன் என்றும் தாய்லாந்தில் பிராவட் போதி சத்துவா என்றும் கிழக்கு ஆப்ரிக்காவில் முருங்கு என்றும் வணங்கி அவரவர் மொழிகளில் வணங்கி மகிழ்கின்றனர்.

## யுதர்களின் நட்சத்திரமும் முருகனும்

முருக வழிபாடு இஸ்ரேயில் நாட்டிலும் இருந்ததற்கான சுவடு தான், இஸ்ரேல் கொடியில் இன்றைக்கும் இருக்கும் அருங்கோண கார்த்திகை நட்சத்திரம். இந்த அருங்கோண நட்சத்திரம் முருக தத்துவத்தின் அடையாளம். முருகனின் கரங்களிலும் மார்பிலும் ஷடாக்ஷர மந்திரத்தை காட்டும் அருங்கோண வடிவத்தைப் பார்க்கலாம். யுதர்களின் மாமன்னன் சாலமோன் அருங்கோண நட்சத்திரத்தின் தத்துவத்தை அறிந்திருக்க வேண்டும். அதனால் தான் இந்த அருங்கோண வடிவிலான சின்னத்தைத்

தென்னாட்டவர்கள் இறை நம்பிக்கை என்ற ஒரு உணர்ச்சி தோன்றிய காலத்தில் வேலையும் இயற்கை அழகு என்று முருகனையும் இறைவனாக வழிபட்டனர். அந்த





இறை நம்பிக்கை பல பரிணாம வளர்ச்சிக் கண்டு இன்று தமிழர்களின் கடவுளாகவும் பரம் பொருளாகவும் முருகனை



ஆனால் எத்தனை சோதனைகள் வந்தாலும் தமிழர்களின் முருக பக்தி தகர்க்க முடியாத அய்யன் முருகனைத் தமிழகத்தில் சேயோன், ஆறுமுகன், குமரன், குகன், காங்கேயன், சரவணன், வேலன், கந்தன், கார்த்திகேயன், சண்முகன், வடிவேலன், சுப்பிரமணியன், மயில்வாகனன், செவ்வேள், கடம்பன், வேலாயுதன், சிங்கார வேலன், ஆண்டியப்பன், கந்தசாமி, செந்தில்நாதன், வேந்தன், மலைஅரசன், மலைவேந்தன் போன்ற பல பெயர்களால் அன்போடு தமிழர்கள் அழைத்து பக்தியோடு கொண்டாடுகிறார்கள். முருக வழிபாடு தமிழ் நாட்டில் ஆழமாக வேரூன்றியது. தமிழர்கள் முருகனை பரம்பொருளாக சிக்கனப்பிடித்துக் கொண்டார்கள் மற்றவர்கள் தடம் மாறினார்கள். அதனால் முருகப் பெருமான் தென்னாடுடைய முருகனாகவும், எந்நாட்டவர்க்கு இறைவனாகவும் திகழ்கின்றான்.

கொண்டாடுகின்றார்கள். தமிழர்களுக்குத் தோன்றிய அதே இறை உணர்வு மற்ற நாடுகளிலுள்ள மக்களுக்கும் தோன்றிய பொழுது அவர்களும் முருகனின் வடிவத்தையும் இயல்பினையும் கொண்ட இறைவனை வழிபட்டார்கள். காலப்போக்கில் பல்வேறு மதங்கள் தோன்றின. இறை வடிவங்கள் மாறின. பூகோள நிலைகளுக்கு ஏற்ப அவர்களின் பண்பாட்டிற்கு ஒப்ப இறை நம்பிக்கைகள் மாறின. அந்த நம்பிக்கைகளுக்கு ஒப்ப அவர்களுடைய பரம்பொருள் தத்துவங்களும் மாறிவிட்டன.



## சமய எழுச்சியால் சமூக மறுமலர்ச்சி காட்டிய

# அப்பர்

பகுதி – 9

## அப்பர் சாடிய குலமும் கோத்திரமும்




**திருமதி மு. சுப்புலட்சுமி,**
வரலாற்றாய்வர்
ஆசிரியர்: www.glorioustamils.com,
www.attraithingal.com,
வலையொலி/ podcast
அற்றைத்திங்கள்...
வலையொலியில் தமிழொலி


அப்பர் வலியுறுத்திய அறங்களுள், நன்னெறிகளை முந்தைய பதிவில் பார்த்தோம். நெகிழ்ந்து நவின்றவை, குழைந்து கூறியவை, மென்மையாய் முறைப்படுத்தியவை, உவமைகளாய் நயந்தவை, பழமொழிகளாய்ச் சொல்லியவை, சினந்து சாற்றியவை, அறுதியிட்டுரைத்தவை என்று திருநாவுக்கரசர் விளக்கியவை அனைத்தும் உணர்ச்சிப் பெருக்கும் மொழிவளமும் கலந்த தீந்தமிழ்ச் சாறு. அவர் வெளிப்படுத்தியவை பத்திமை நெறி என்ற பெட்டகத்துள் அடைக்கப்பட்டாலும், அதில் தனித்தொளிரும் சமூகப் பார்வையே அவரைப் பத்திமை நெறியாளர்களுள் முற்போக்குச் சிந்தனையாளராகவும் காட்டி நிற்கிறது.

தம்மை மீறிய அறியவொண்ணா ஆற்றல்மேல் அச்சமென்ற முதல்நிலை மெள்ள மெள்ள மாறி இறைவனென்ற பெயரால் பற்றென்ற படிநிலைக்கு மக்கள்கூட்டம் கட்டுப்படுவது, தலைமுறைகள் கடந்து ஏற்படும்

சமூகமாற்றம். சமூகம் மாற்றிய பத்திமைப்போக்கில், இறைப்பற்றைத் தாண்டிய அடுத்த படிநிலை மிகவும் கடினமான ஒன்று.

அந்நிலை

1. இறைப்பற்றாளர்களைக் காட்டிலும் மேலும் நெருக்கமாக இறைவனை உணரச் செய்வது;

2. யான் பற்றிய இறைவன், நான் அவனைப் பற்றிக்கொண்டது போலவே என்னைப் பற்றியிருப்பான் என்ற நம்பிக்கை தருவது;

3. நான் தாள்பிடித்த கடவுள் என் தோளணைத்துத் துணைநிற்பான் என்ற உறுதியளிப்பது;

4. நெஞ்சில் இறைவனை நினைந்து நினைந்துருக, தனித்ததொரு பேருருவாக இல்லாமல் மனத்தகத்து குடிகொண்ட அன்பனென்ற புரிதல் எய்துவது

அதுதான் அன்பென்னும் உன்னதநிலை.

எனில், அன்புவழியில் இறைவனைப் பற்றுவது அவ்வளவு கடினமானதா? நாவுக்கரசர் பதிகங்களைப் படிக்கையில் ஆமெனவே தோன்றுகிறது. அன்புநெறியால் இறைவனை நாட அவர் கூறும் வழிமுறைகளில் சில

1. தன்னைப் போல் பிறரையும் நேசிக்கும் பண்பு வேண்டும்;

2. பாகுபாடின்றி அனைவரையும் ஒன்றுபோல் மதிக்க வேண்டும்;

3. விதவிதமாய்ச் சடங்குகளையும் சாத்திரங்களையும் புறந்தள்ளிச் சிந்திக்க வேண்டும்;

4. தொன்றுதொட்டதென நம்பப்படும் பத்திமைப் பழக்கவழக்கங்கள் சகமனிதர்களைப் பிரிவினைக்கு உள்ளாக்குமெனில், பகுத்தறிவுடன் செயல்பட வேண்டும்;

5. மனமே இறைவன் வாழும் ஆலயமெனில், இறைவனை நெஞ்சில் வைத்த அடியார் அனைவரும் இறைவடிவே என்ற தெளிவு வேண்டும்.

‘அன்பினுள்ளாகி அமரும் அரும்பொருள் அன்பினுள்ளார்க்கே அணைதுணையாமே’ என்று திருமூலரும், ‘அன்புறு சிந்தையராகி அடியவர் திருநல்லூர்ப் பெருமணம் நோக்கிச் செல்வர்’ என்று சம்பந்தரும், அன்பே அடியார்களின் மைய உணர்வு என்றுரைத்தார்கள். நம் நாவுக்கரசரோ, ‘தமக்கன்பு பட்டவர் பாரமும் பூண்பர் திருவாரூர் அரநெறி இறைவர்,’ என்று அடியார்களிடத்து இறைவனுக்கான பொறுப்பையும் உறுதிபடவுரைத்து அன்பின் உயர்வை உறுதிசெய்கிறார்.

நாயன்மார்களின் வாழ்வின்மூலம் நாமுணரவேண்டியதும் அன்பின்



ஆழத்தைத்தான். இறைவன்பால் அவர்கள் கொண்ட மட்டற்ற அன்பும் பதிலுக்கு இறைவன் அன்பர்கள்மீது பொழியும் இணையற்ற அன்புமே பத்திமை இயக்கத்தின் அடிநாதம்.

பின்னும், அதே கேள்வி எஞ்சி நிற்கிறதுஞ் அன்புவழியில் இறைவனைப் பற்றுவது அவ்வளவு கடினமானதா?

'அஞ்சியாகிலும் அன்புபட்டாகிலும் நெஞ்சம்வாழி நினை நின்றியூரரைநீ' (05.023.09) என்று, திருநின்றியூர் ஈசனை அச்சத்தாலோ அன்பாலோ நினைக்குமாறு பணிக்கிறார் அப்பர். இங்கு, நெறியின்றிப் பயணித்த சமூகத்தை இறைவன்பால் மனத்தைச் செலுத்த வலியுறுத்தும் நோக்கில், அப்பர் அச்சத்தையும் சேர்த்துக் கொண்டதாகவே தோன்றுகிறது. ஏனெனில், "இறைவனின் தமர் நாம் அஞ்சுவது யாதொன்றும் இல்லை; அஞ்ச வருவதும் இல்லை," என்றும் "திருச்சேறை செந்நெறியப்பர் இருக்க அஞ்சுவது என்னுக்கே?" என்றும், நெஞ்சை அச்சம்நீக்கி அமைதிப்படுத்திய அப்பரா இறைவனிடம் அச்சப்படச் சொல்லுவார்?

இறைவழிபாட்டில் நிலைத்துப்போன 'பயபக்தி' என்ற சொற்றொடரை நாவுக்கரசர், 'அஞ்சியாகிலும் அன்புபட்டாகிலும்' என்றதன்மூலம் கையாண்டிருந்தாலும், அச்சம் நீக்கி

அன்பையே உயர்த்திப் பிடித்தார் என்பதற்கு அவர் பதிகங்களே சான்று.

ஆயினும், முன்னெழுந்த கேள்வியே விஞ்சி நிற்கிறதுஞ். அன்புவழியில் இறைவனைப் பற்றுவது அவ்வளவு கடினமானதா? நாவுக்கரசரின் மொழியில் கடினமெனவே தோன்றுகிறது. ஏன்?

அன்பும் அறனும் அறிவும் உடைத்தாயின்..

சாத்திரங்களை நம்பிய வேதியர்க்கும் அன்பொன்றையே மனதில் வைத்த தொண்டர்க்கும் தேவையான அடிப்படைக் கோட்பாடு மனிதம் பேணலென்பதைப் பலவாறாக எடுத்துரைத்தார் அப்பர். கண்மூடி வழிபட்ட தொண்டர்கள் அறிவுக் கதவை மூடாமல் அன்புடன் மனிதம் பேணுவதைப் பத்திமையின் தலையாய பகுதியாக முன்வத்தார் அவர். அதனால்தான், தம் பாடல்களில் நல்லறிவுக்கும் அறிவில் செறிவுக்கும் சிறப்பிடம் கொடுத்தார். சிவபெருமான், ஆதியுமறிவுமானவர் அறிவினுட் செறிவுமானவர் சோதியுட் சுடருமானவர் தூநெறிக் கொருவரானவர் என்று கூறுமிடத்தில் அறிவில் பொருந்தி நிற்கவேண்டிய செறிவையும் சேர்த்தே குறித்தார்.

பின், இறைவனை வழிபடும் அன்புநெறி கடினமாயில்லாமல் எப்படியிருக்கும்?



திருச்சேறை அம்மையப்பரை வழிபட, தொண்டர்களுக்குக் 'கூரிதாய அறிவு கைகூடிடும்' என்று கூறியவர், 'பூந்துருத்தி உறையும் அறிவுடை ஆதிபுராணனை நாமடி போற்றுவதே' என்று ஆதிபுராணனின் அறிவுத்திறனையும் போற்றத் தவறவில்லை.

'அன்பும் அறனும் உடைத்தாயின்' என்று வள்ளுவர் இல்வாழ்க்கைக்குச் சொன்னதைப் பத்திமையில், அன்பும் அறமும் அறிவுமென்று இணைத்துச் சொன்ன புதுமை எண்ணத்திற்குச் சொந்தக்காரர் நாவுக்கரசர். அன்புடன் அறிவு இணைதல்

வேண்டும்; அறிவுத்திறனோடு இ ை ண ய வே ண் டி ய து ஒழுங்குமுறையன்றோ?

வானோர்கள் முறைமையால் வணங்கியேத்த, தேவர் கூடி முறைமுறை இருக்குச் சொல்ல, முறை யினால் முனிகள் வழிபாடு செய்ய என்று முறைகளுக்கு மதிப்பளித்த அப்பர், தொண்டர்களுக்கு மட்டும் அன்பொன்றையே முறையெனச் சாற்றினார். எனவேதான், அன்பின் வழியொற்றியே இறைவனை அவர்கள் பூவும் நீரும் பண்ணும் கொண்டு தொழுதழுதாடிப் பாடினர்.

துன்பிலாத் தொண்டர் கூடித் தொழுதழு தாடிப் பாடும் அன்பலாற் பொருளுமில்லை ஐயன் ஐயாறனார்க்கே (04.040.06) என்று, தொண்டர்களின் அன்பைக் காட்டிலும் இறைவனுக்கு வேறுயர்ந்த பொருளேதுமில்லை என்று கூறியவர், மற்றோரிடத்தில் மேலும் தெளிவுபடுத்தினார்

தொண்டலாற் றுணையு மில்லை தோலலா துடையு மில்லை

கண்டலா தருளு மில்லை கலந்தபின் பிரிவ தில்லை

பண்டைநான் மறைகள் காணாப் பரிசின னென்றென் றெண்ணி

அண்டவா னவர்க ளேத்து மையனை யாற னார்க்கே

(04.040.04)

பழைய நான்மறைகளாலும் உ ண ர வி ய ல ா த வ ர் சிவபெருமானென்று வானவர்கள் பணிந்து அவர் துணையைத் தேடுகின்றனர். ஆனால் அவரோ யார் துணையை நாடுகிறாராம்? ‘தொண்டலாற் றுணையுமில்லை; கலந்தபின் பிரிவதில்லை’ தொண்டரின் அன்புக்கே இறைவன் கட்டுப்பட்டவர்; தொண்டர்களின் அன்பில் கலந்தபின் அவர் பிரிவதுமில்லை.

ஆயினும், அன்புவழி இறைநெறிக்கும் பலப்பல முறைமைகள் வைத்தார் நாவுக்கரசர். அவை, அன்பை மட்டுமே நம்பியோர்க்கு எளியனவாகவும், மக்களிடமிருந்து இறைவனைத் தள்ளிவைத்த கோட்பாடுகளை நம்பிய சமயவாதிகளுக்குக் க டி ன ம ா ன ை வ ய ா க வு ம் இருந்தனபோலும். தம் பாடல்களில் அப்படிப்பட்டவர்களை நாவுக்கரசர் அறிவுறுத்திக் கொண்டேயிருந்தது தெரிகிறது.

## நாவின் மன்னவர் உரைத்த சமூக நீதி

சேக்கிழார் அப்பரை ‘நாவின் மன்னவர்’ என்று அன்புடன்

விளிக்கிறார். இறைவனின் அருளென்ற குடையின்கீழ் அன்பர்களில் பாகுபாடில்லை என்ற சமூகநீதியை வாழ்க்கை முறையாகக் கொண்டது அவருடைய அன்புநெறி. வையகத்து மனிதர்கள்மேல் பிரி வினையறியா அன்பு கொள்ளலே இறையன்பு என்பதே அப்பரின் கொள்கை. பத்திமையின் பெயரால் இறைவனைச் சமூகத்திடமிருந்து தனிமைப்படுத்தியோருக்கும், சமூகத்தோரை உயர்வு தாழ்வு கண்டு பிரித்தவர்களுக்கும் அப்பர் சொன்ன அன்புநெறி கடினமானதுதானே..

மனிதர்குலமெனும் ஒற்றைப் பிரிவை ஏற்காமல், குலமும் கோத்திரமும் கொண்டு பிரிவினை பேசும் சமயச் சழக்கர்களைச் சாடிய பத்திமைக்கால முன்னவர் அவரே. திருமாற்பேற்றுப் பதிகத்தில் அத்தகையோரின் ஒவ்வா எண்ணங்களைக் குறிப்பிட்டு, சினந்து சீறினார்.

சாத்தி ரம்பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்தி ரமுங் குலமுங்கொண் டென்செய்வீர்
பாத்தி ரஞ்சிவ மென்று பணிதிரேல்
மாத்தி ரைக்கு ளருளுமாற் பேறரே
(05.060.03)

சிவனே வணங்குதற்குரியவர் என்று பணிந்தால் நொடிப் பொழுதில் அருளுவார் மாற்பேறர் என்பதை மட்டும் சொல்லி நகர்ந்திருந்தால், இறைவனைப் பணிந்து வணங்கிவிட்டு எளிதில் சென்றிருப்பர் அப்பர் சாடிய சழக்கர்கள். அவரோ அவர்களை நிற்கவைத்துக் கேள்வியெழுப்பினார். “கோத்திரமும் குலமுங்கொண்டு என் செய்வீர்?” என்று கனலைக் கக்கிய அவருடைய கேள்வி சிலரையாவது சிந்திக்கச் செய்திருக்கும். “இருந்து சொல்வன் கேளுங்கள் ஏழைகாள்! சாற்றிச் சொல்வன் கேளுங்கள் தரணியீர்!” என்று அப்பதிகத்தில், பொங்கிய ஆதங்கத்தைத் தொடர்ந்து சினந்தும் வெளிப்படுத்தினார் நாவுக்கரசர் எனும் சமூகப் போராளி.

அதுமட்டுமா? அப்பதிகத்தின் முதல் பாடலிலேயே, ‘ஓதி அஞ்செழுத்தும் உணர்வார்கட்குப் பேதமின்றி அவரவருள்ளத்தே’ உமையோடு இருந்து மகிழ்வர் திருமாற்பேறர் என்றார். மனிதருள் நிலவிய பேதங்களால் பாதிக்கப்பட்ட அப்பர், இறைவன் பேதமின்றி அருளுபவர் என்று உறுதியளித்து நல்வழிப்படுத்த முயன்றார். கூடுதலாக அப்பதிகத்தில், ‘காவெனில் வாட்டந் தீர்க்கவும் வல்லர் மாற்பேறரே’ என்றும், ‘செய்ய பாதமிரண்டும் நினையவே வையம் ஆளவும் வைப்பர் மாற்பேறரே’ என்றும் இறைவனை வழிபட, சாத்திரங்கள் தேவையில்லை என்பதை மென்மேலும்

வலியுறுத்துவதை உணரலாம்.

## அப்பரைப் பாதித்த குல வேற்றுமை

‘கோத்திரமும் குலமும் கொண்டென் செய்வீர்?’ என்று கோபமாய்க் கேட்ட அப்பர், குலத்தால் மக்களைப் பிரித்து விலக்கிய சமூகப் பார்வையை மேலும் பல்வேறிடங்களில் சுட்டிப் பாடினார்.

சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமில னாடொறு நல்கு வானலன்
குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே
(04.011.06)

தன்னைச் சார்ந்தவர்களுக்கு நாடோறும் நலம் நல்கும் சங்கரன், சாராதவர்களுக்கு நலத்தை வழங்கமாட்டார் என்று பொதுவாகப் பொருள் கொள்வர்; இதை வெறுமனே சொல்லாமல் சிவனைச் ‘சலமிலன்’ என்ற சொல்லால் குறிப்பிடுகிறார் அப்பர். ‘சலம்’ என்ற சொல் சிந்திக்கத் தூண்டுகிறது. ‘சலம்’ என்ற சொல் மதுரைக் காஞ்சியில் மாறுபாட்டைக் குறிக்க, பரிபாடலில் வஞ்சனை (பாடல் 6) என்றும் கோபமென்றும் (பாடல் 15) பொருள்படக் கையாண்டுள்ளனர் ஆசிரியர்கள். வள்ளுவரும் வஞ் சனையைக் குறிக்கிறார் (குறள் 660).

சைவத்தைச் சாராதவர்களுக்கு நலன் வழங்கமாட்டார் என்றதன் எதிர்ப்பதமாக, ‘கரைந்து கைதொழு வாரையுங் காதலன் வரைந்து வைதெழு வாரையும் வாடலன்’ (05.012.01) என்பதும் அப்பர் வாக்கே. மனமுருகி கைதொழுவாரைக் காதல்மிகுந்து அருளும் சிவன், தம்மை இகழ்வாரை வாடச் செய்யமாட்டார் என்று திருவீழிமிழலைப் பதிகத்தில், சைவம் தழுவியோருக்கும் சைவம் தழுவாதோருக்கும் இடையில் வேறுபாடு காணாமல் அருளும் இறைவனின் இயல்பைப் பெரிதும் போற்றினார் அப்பர்.

அடுத்து வரும் ‘குலமிலராகிலும் குலத்துக்கேற்பதோர் நலமிகக் கொடுப்பது நமச்சிவாயவே’ என்ற அடிகளை, சைவக் குலமிலரா யினும் அவர்தம் பற்றுக்களால் செய்யும் வினைகளுக்கேற்ப நலந்தருவது நமச்சிவாயம் என்றே பொருள்கொள்ளல் சரியாகும்.

ஆனால், அப்படியொரு முடிவுக்கு வருவதற்கு, ’குலம்’ என்ற சொல்லைத் தம் பாடல்களில் அப்பர் எவ்வாறெல்லாம் பயன்படுத்தினார் என்பதை நோக்க வேண்டும்.

(தொடரும்)

# சாரதா புஜங்கம் அஷ்டகம்

## தமிழ் மொழியாக்கம்

முனைவர் ரெ.சந்திரமோகன்,
முதல்வர்,
முனைவர் சங்கரதாஸ் மற்றும் வீ.பாஸ்கரன், பேராசிரியர் தமிழ்த்துறை, நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

கோவில் நகரமான சிருங்கேரியின் தெய்வம் சாரதா. அவள் சரஸ்வதி தேவியின் அவதாரமாகக் கருதப்படுகிறாள். துங்கா நதிக்கரையில் உள்ள இந்த நகரத்தில் ஆதி சங்கரர் தனது மடங்களில் ஒன்றை நிறுவியுள்ளார். ஆதி சங்கரரின் மற்ற ஸ்தோத்திரங்களைப் போலல்லாமல், இந்த மகா ஸ்தோத்திரம் மிகவும் சங்கீதமாக இருந்தாலும் பின்பற்றுவது கடினம். அதன் காரணமாக பல உரைகள் உள்ளன. பிரம்ம சந்தேசம் ஏப்ரல் 2009 இதழில் வெளியான தமிழ் மொழிபெயர்ப்பை பின்பற்றி இசைப்பாவாக உருவாக்கி உள்ளோம்.

மன்ஸ்வக்ஷோஜ கும்பம், சுதா பூர்ண கும்பம்,

பிரசாவளம்பம், ப்ரபுண்யாவலம்பம்,

சதஸ்யேந்து பீம்பாம், ஸதனோஷ்ட பீம்பாம்,

பஜே சாரதம்பாம் அஜஸ்ரம் மதம்.1

அமிர்தம் நிறைந்த பானைகளான பானை போன்ற மார்பகங்களை உடைய, தன் அருளைப் பொழியத் தயாராகி, நன்மை செய்பவர்களைக் கவனித்துக் கொள்கிறாள். செர்ரி பழம் போன்ற சிவந்த உதடுகளுடன் எப்போதும் ஒளிரும் சந்திரனின் வடிவத்தை அவள் கொண்டிருக்கிறாள். என்றென்றும் என் அன்னையாக இருக்கும் அன்னை சாரதா அவரை பிரார்த்திக்கிறேன்.

*அனைத்தையும் அருள்வேன் ஆனந்தமாய் என்றே அமுதக் கலசங்களை*

*அன்புடன் சுமந்து வந்தவளே அன்னையே சாரதா வணங்குகிறேன்*

*நின்னை அறியும் நிலையெய்த புண்ணியம் கோடி வேண்டுமம்மா*

*நிலவைச் சூடிய முழுநிலவே! செவ்விதழ் அன்னையே வணங்குகிறேன்!*

---

கடக்ஷே தயார்த்ரம், கரே ஞான முத்திரை,

கலாபிர் வினித்திரம், கலப்பை சுபத்ரம்,

புரஸ்திரீம் விநித்ரம், புர ஸ்துங்க



பத்ரம்,

பாஜே சாரதம்பாம் அஜஸ்ரம் மதம்பம் 2

அவள் பார்வையில் கருணை ததும்ப, கைகளில் ஞானத்தின் குறியீடு தெரிந்தது.எப்போதும் கலை வடிவங்களால் விழிப்படைந்து,எப்போதும் ஆபரணங்களை அணிந்து, துங்க நதியின் கரையில் வசிக்கும் விழிப்புற்ற பெரும் மங்கை எவள்? என்றென்றும் என் அன்னையாக இருக்கும் அன்னை சாரதா அவரை பிரார்த்திக்கிறேன். சிருங்கேரி கோயில் துங்க பத்ரா கடற்கரையில் அமைந்துள்ளது, துங்க பத்ரா அல்ல அதனால் பத்ரா என்பதற்கு மங்களகரமானது என்ற ஒரு பொருளை நான் எடுத்துக் கொண்டேன்.

*கடைக்கண் கருணை பொழிபவளே! கலைஞானம் தடையின்றி அருள்பவளே!*

*சடையிற் கலைதனை கொண்டவளே! ஞான முத்திரை கையவளே!*

*நன்நடை கொண்ட சான்றோரின் நல்மனம் உறையும் நாயகியே!*

*உன்குடை கீழ் சுழல்வதெல்லாம் நல்லவை என்றே கொள்வோமே!*

---

லாலாமங்கா பாலாம் லசாத் கண லோலாம்,

ஸ்வபக்தைகா பாலம், யாச ஸ்ரீ கப்போலம்,

கரே த்வக்ஷா மாலாம், கனாத் ப்ரத்னா லோலாம், பஜே சாரதம்பாம் அஜஸ்ரம் மதம். 3

நெற்றியில் ஆபரணங்கள் அணிந்து, நல்ல இசையில் பரவசமடைந்து, அழகுக்குப் புகழ்பெற்ற இரண்டு கன்னங்களுடன் தன் பக்தர்களைப் பார்த்துக் கொண்டே, கையில் மணிமாலை அணிந்தவளும், ஆபரணங்களில் ஆழ்ந்த விருப்பம் கொண்டவளுமான அவள், என்றென்றும் என் அன்னையாக இருக்கும் அன்னை சாரதா அவரை பிரார்த்திக்கிறேன்.

*நெற்றியில் குங்குமம் நிறைந்தவளே! அம்மா சாரதா தேவியே!*

*வெற்றியில் அடியார் குறைகளைந்து நல்இசை கொண்டு ஆடுகவே!*

*நின்கை ஒளிரும் செபமாலை மிஞ்சிடும் உந்தன் அருள் முகமே!*

*நின்உயர் வாக்கால் காத்திடுவாய் அன்பின் தெளிவே வணங்குகிறேன்!*

---

**ஸு சீமந்த வேணீம் த்ருச நிர்ஜிதைனீம்,**

**ரமத் கீர வனீம் நமத் வஜ்ர பனிம்,**

**சுதமந்தராஸ்யம், முத சிந்திய வீணீம்,**

**பஜே சாரதம்பாம் அஜஸ்ரம் மதம். 4**

**சடை முடியை நடுவில் பிரித்து, தொங்கும் அலங்கார பந்துகளைக் காட்டும், தேவேந்திரனால் வழிபடப்பட்ட மானின் விளையாட்டுப் பார்வையுடன், அமிர்தம் போன்ற சிரித்த முகமும், நம் மனதை ஈர்க்கும் கூந்தலும், என்றென்றும் என் அன்னையாக இருக்கும் அன்னை சாரதா அவரை பிரார்த்திக்கிறேன்.**

*மான்களை வென்ற நயனங்கள் ஆடும் குழலோ பின்னலுடன்!*

*உந்தன் தேன்மொழி கேட்டதனால் தத்தை தம்மொழி மறந்ததம்மா!*

*வச்சுராயுதம் கொண்ட இந்திரனும் தேவர்கள் சூழ வணங்கிடுவான்*

*புன்னகை ஆயுதம் கொண்டவளே! கருணையே நின்னை போற்றுகிறேன்!*

---

**சுசந்தம் சுதேஹம் ட்ரகண்டே கசந்தம்,**

**லசத் ஸல்ல தாகீ மந்தம சிந்த்யம்,**

**ஸ்மர தபசாய் ஸங்க பூர்வ ஸ்திதம் தாம்,**

**பஜே சாரதம்பாம் அஜஸ்ரம் மதம். 5**

**மிகவும் அமைதியான, அழகான மைன், கருப்பு முடி, மான் போன்ற கண்கள், மனத்தால் அளவிட முடியாத மென்மையான ஏறுபவனைப் போன்ற பிரகாசமான உடலுடன், மாமுனிவர்களின் கற்பனை உலகிற்கு முன்னரே இருந்தவர், என்றென்றும் என் அன்னையாக இருக்கும் அன்னை சாரதா அவரை; பிரார்த்திக்கிறேன்.**

*பொற்கொடியே அன்னை சாரதாம்மா! தேவதைகளும் அருள் பெருமாமே!*

*பற்றினை விட்ட முனிவர்பலர் உன்பதம் போற்றி உய்கின்றார்*

*பிரமனும் வணங்கிய காரிகையே! கேசம் வரை நீர் கண்ணழகி!*

*வரங்கள் அழகுடன் அருள்பவளே! அம்மை-மயே உன்னைப் போற்றுகிறேன்!*

---

**குரஞ்சே, துரங்கே மிருகேந்திரே, ககேந்திரே,**

**மரலே மாதே மஹோக்ஷே ஆதி ரோடாம்,**

**மகாத்யம் நவம்யம் ஸத சாம ரூபம்,**

**பஜே சாரதம்பாம் அஜஸ்ரம் மதம். 6**

**மான், குதிரை, சிங்கம், கழுகு ஆகியவற்றின் மீது சவாரி செய்பவன், அன்னம், காளை, யானை ஆகியவற்றின் மீது சவாரி செய்பவன், ஒன்பது புனித**

**நாட்களில், மிகவும் அமைதியான வடிவம் கொண்டது, என்றென்றும் என் அன்னையாக இருக்கும் அன்னை சாரதா அவரை பிரார்த்திக்கிறேன்.**

அன்னப்பறவை மட்டுமல்ல யானை ரிசபக் காளையுடன்

மானும் சிங்கமும் கருடனுமே உகந்து ஏற்பாய் வாகனமாய்

நவவடிவம் கொண்ட நாயகியே சாம வே-தமே உன் உருவே!

தவம்செய் அடியார் அனைவருக்கும் சம-மாய் அருளும் தாய்நீயே!

---

**ஜ்வலத் காந்தி வஹ்னிம், ஜகன் மோகனம்கீம்,**

**பஜே மானசம் போஜ சுப்ரந்த ப்ருங்கீம்,**

**நிஜ ஸ்தோத்ர சங்கீத ந்ருத்ய பிரபாங்கீம்,**

**பஜே சாரதம்பாம் அஜஸ்ரம் மதம். 7**

**கொழுந்துவிட்டு எரியும் நெருப்பைப் போல அழகாக இருப்பவள், உலகைக் கவர்ந்திழுக்கும் அழகுடையவள், தேனீ போல பக்தர்களின் மனம் போல் தாமரை மலரில் வலம் வருபவள்,உண்மையான பிரார்த்தனை, பாடல் மற்றும் நடனத்தால் யாருடைய பிரகாசம் அதிகரிக்கிறதோ, என்றென்றும் என் அன்னையாக இருக்கும் அன்னை சாரதா அவரை பிரார்த்திக்கிறேன்.**

சுடர்விடும் நெருப்பின் ஒளிபோல மிளிரும் அன்னை சாரதையே

அடர் அருட்தேன் பருகிடவே வண்டாய் சுற்றும் இவ்வுலகு

அனைவரின் எண்ணம் நிறைந்தவளே அழகே அன்னையே சாரதையே!

அரவணைக்கும் உன்னைப் பாடுகிறேன் இசையுடன் இசைந்தே ஏற்றிடுவாய்!

---

**பவம்போஜ நேத்ராஜ ஸம்பூஜ்யமானம்,**

**லாஸன் மந்தா ஹஸ பிரபா வக்த்ர சிஹ்னாம்,**

**சலத் சஞ்சலோதர தடங்க கர்ணம்,**

**பஜே சாரதம்பாம் அஜஸ்ரம் மதம். 8**

**விஷ்ணு, சிவன், பிரம்மா ஆகியோரால் வழிபடப்படுபவள்,தன் காமப் புன்னகையால் முகம் பிரகாசிப்பவள், ஊசலாடும் காது பதக்கங்களால் யாருடைய அழகு அதிகரிக்கிறதோ, என்றென்றும் என் அன்னையாக இருக்கும் அன்னை சாரதா அவரை பிரார்த்திக்கிறேன்.**

போற்றியோ சாரதா அன்னையே!

போற்றியோ நிந்தன் காதணி!

போற்றுவர் உன்னை அனுதினமே அனைவரும் உன்திரு முறுவல்கண்டு

திருமால் பிரமன் சிவனுடனே தேவர்கள் போற்றும் நாயகியே!

தாயாய் உலகைக் காப்பவளே! என்றும்

நினையே பணிகின்றேன்!

- திருமிகு சாரதா புஜங்கம் முற்றிற்று

# பண்டெழுவர் தவத்துறை

பகுதி–2

(சிராப்பள்ளிக்கு அருகில் உள்ள தவத்துறையில் அமைந்துள்ள திருக்கோயில் அமைப்பு குறித்த கட்டுரையின் தொடர்ச்சி)




**இரா. கலைக்கோவன்,**

இயக்குநர்,

டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்,

திருச்சிராப்பள்ளி


## விமானம்

நாற்புறத்தும் பிதுக்கமான உறுப்பு மாறும் சாலைப்பத்திகள் பெற்ற எளிய ஒருதளக் கலப்புத் திராவிடமாக அமைந்துள்ள அம்மன் விமானத்தின் கபோதபந்தத் தாங்குதளம் தாமரை உபானத்தின் மீது எழுகிறது. ஜகதி, உருள்குமுதம், கண்டம், கூடுவளைவுகளுடனான கபோதம், சிறிய அளவிலான பூமிதேசம் என அமைந்துள்ள தாங்குதள உறுப்புகளுள் சாலைப்பத்தியில் மட்டும் மாற்றாக எளிய உபானமும் தாமரை ஜகதியும் காட்டப்பட்டுள்ளன. அழகியல் நோக்குடனும் தளத்தை உயரப்படுத்தும் எண்ணத்திலும் தாங்குதள உறுப்புகளுக்கு இடையே கம்புகளும் தாமரைவரிகளும் ஆங்காங்கே இணைக்கப்பட்டுள்ளன. மேலே வேதிகைத்தொகுதியும் துணைக்கம்பும் அமைய, உள்ளடங்கிய சுவர் நாகபந்தமும் செவ்வகப்பாதமும் கொண்ட எண்முக அரைத்தூண்களால் தழுவப்பட்டுள்ளது. தாமரைப் பலகை மீதுள்ள வீரகண்டம் தாங்கும் போதிகை மதலையால் உத்திரம் ஏந்தி, பூமொட்டு நாணுதலைத் தாழ்த்தியுள்ளது. வாஜனம், தாமரை வலபி கூரை தழுவ, கபோதம் ஆழமற்ற கூடுவளைவுகளுடன் கோணை, நடுப்பட்டங்களும் பெற்றுள்ளது. மேலே பூமிதேசம்.

உருளை அரைத்தூண்கள் தழுவும் சாலைக்கோட்டங்களில் தெற்கில் கௌரியும் மேற்கில் வைணவியும் வடக்கில் நான்முகியும் நிற்கின்றனர். தென்கோட்டப்

பக்கச்சுவரில் எஞ்சியிருக்கும் முனிவர்களால் இக்கோட்டம் ஒரு காலத்தே தென் திசைக்கடவுளைப் பெற்றிருந்தமை அறியலாம். முதன்மை கிரீவகோட்டங்களில் சாலைக்கோட்டம் போலவே இறைவி வடிவங்கள் அமைய, கிழக்குக் கோட்டத்தில் மகேசுவரி. துணை கிரீவ கோட்டங்களில் அடையாளப்படுத்த முடியாத பெண் தெய்வங்கள் காட்டப்பட்டுள்ளன.

## முக, பெருமண்டபங்கள்

விமானம் ஒத்த கட்டமைப்புடன் விளங்கும் முகமண்டபத்தின் தென்கோட்டத்தில் பிள்ளையாரும் வடகோட்டத்தில் கௌமாரியும் உள்ளனர். விமானத்திற்கும் முகமண்டபத்திற்கும் இடை யிலுள்ள ஒடுக்கங்களில் குடப்பஞ்சரங்கள். கபோதபந்தத் தாங்குதளம், வேதிகைத்தொகுதி பெற்றெழும் பெருமண்டபத்தின் நான்முக அரைத்தூண்கள் அணைத்த சுவர், கோட்டங்கள் இன்றி அமைய, மேலே வெட்டுத் தரங்கப் போதிகைகள் தாங்கும் கூரையுறுப்புகள். கூரைநீட்டலான கபோதம் வெறுமையாக உள்ளது. இம்மண்டபத்தின் கிழக்கிலும் வடக்கிலும் வீரபாண்டியரின் இரண்டு கல்வெட்டுகள் கண்டறியப்பட்டன.18



பெருமண்டப வாயிலின் இருபுறத்தும் பேரளவிலான காவற்பெண்டுகளும் சாமரப்பாவைகளும் வண்ணச் சுதைவடிவங்களாய் நிற்க, மண்டபத்தை உட்புறத்தே நான்கு நான்முகப் பெருந்தூண்கள் தாங்குகின்றன. வடசுவர்ச் சாளரம் மண்டபத்திற்குக் காற்றும் ஒளியும் தர, வாயிற்படியில் பொரிந்த நிலையில் தெலுங்குக் கல்வெட்டொன்று காணப்படுகிறது. பெரு, முகமண்டபங்களுக்கு இடைப்பட்ட சிறு மண்டபத்தையடுத்துள்ள தூண்களற்ற முகமண்டபச் சுவர்களில் தட்டோடு ப தி க் க ப் ப ட் டு ள் ள து . கருவறையில் தாமரைத்தளத்தில் சமபங்கத்தில் எழுந்தருளியுள்ள பெருந்திருவாட்டியின் வல முன் கை காக்கும் குறிப்பிலும் இட முன் கை அருட்குறிப்பிலும் உள்ளன. சடைமகுடம், ஆரங்கள், தோள், கைவளைகள், மகரகுண்டலங்கள்,



இடைக்கட்டுடன் பட்டாடை கொண்டிலங்கும் எழிலார்ந்த தேவியின் பின்கைகளில் அங்குசம், பாசம்.

### சுற்றுமாளிகையின் வடசுவர்

அம்மன் திருமுன் சுற்றுமாளிகை வடசுவரின் புறக் கட்டமைப்பு முற்சோழர் கலைமரபில் உள்ளது. முக, பெருமண்டபங்கள் எனக் கொள்ளத்தக்க நிலையில் இரண்டு பிரிவுகளாக உள்ள இக்கட்டமைப்பில் சோழர் கல்வெட்டுகள் இடம்பெற்றுள்ளன.19 இதன் வடகிழக்குப்பகுதி சிறு அறையெனத் தடுக்கப்பட்டுள்ளது. அதன் வா யில்நிலையில் உத்தமசோழர் கல்வெட்டும் உட்புறச் சுவர்ப்பகுதியில் ஆதித்தகரிகாலர் கல்வெட்டும் இடம்பெற்றுள்ளன.20 பாதபந்தத் தாங்குதளம், வேதிகைத்தொகுதி, சதுரபாதங்கள் பெற்ற எண்முக அரைத் தூண்கள் தழுவிய சுவர், குளவும் தரங்கமும் நடுப்பட்டையும் பெற்ற போதிகை, பூதவலபி பெற்றுள்ள முகமண்டபத்தின் சட்டத்தலை பெற்ற உருளை அரைத்தூண்கள் அணைத்த மகரதோரணத் தலைப்பிட்ட இரண்டு கோட்டங்களும் வெறுமையாய் உள்ளன.

முகமண்டபம் போலவே கட்டமைக்கப்பட்டு, இந்திரகாந்த அரைத்தூண்களால் தழுவப்பட்டுள்ள பெருமண்டபத்தின் ஐந்து சாலைப்பிதுக்கங்களும் உருளை அரைத்தூண்களின் தழுவல் பெற்ற, சிற்பங்களற்ற கோட்டங்கள்



கொண்டுள்ளன. வேதிபாதங்களில் ஆங்காங்கே சிற்றுருவச் சிற்பங்கள். இரு மண்டப வலபிகளிலும் உள்ள பூதவரி சிறப்பானது. இறைவனுக்குப் படையல் சுமந்து செல்லும் கவரி, குடையுடனான பூத வரிசை, ஒருவர் கண் தூசியை மற்றொருவர் ஊதி அகற்ற முயற் சிக்கும் காட்சி, திண்டொன்றின்மீது தலையிருத்திப் படுத்திருக்கும் அழகு பொலியும்

இளநங்கை, சங்கூதும் இரட்டையர், கையிலேந்திய மாலைகளுடன் இலிங்கவழிபாடு நிகழ்த்தும் முனிகணங்கள், ஆலிலைக் கண்ணன் என இப்பூதவரி சோழர் காலப் பண்பாட்டுப் புதையலாய் விளைந்துள்ளது. இவ்வலபிக்கு மேல் எளிய அமைப்பிலான மற்றோர் வலபியும் கபோதமும் பூமிதேசமும் உள்ளமை அவற்றைப் பின்னாளைய இணைப்புகளாய் அடையாளப்படுத்துகின்றன.

## இறைவன் கோயில்

இறைவன் கோயில் அமைந்திருக்கும் உள்சுற்றின் வாயிலை அடைய, வெளிச்சுற்றின் மேற்கிலுள்ள நடைவிரிவு உதவுகிறது. அதன் கூரையை இருவகைத் தூண்கள் தாங்குகின்றன. முதல் வகையின அம்மன் திருமுன் நடைத்தூண்களை ஒத்தமைய, இரண்டாம் வகைத் தூண்கள் ஒட்டுத்தூண்களாக உள்ளன. அவற்றுள் சிலவற்றின் செவ்வகப்பாதங்களில் சிற்பங்கள் காணப்படுகின்றன. ஒட்டுத்தூணின் மதலை தாங்கும் செவ்வகப் பலகையில் யாளி அமர, அதன் மேலுள்ள கண்டம் பாலியல் சிற்பங்கள் பெற்றுள்ளது. யாளிகள் தாங்கும் உத்திரத்தின் மேலேயுள்ள



மதலை கூரையை ஏந்த, நாணுதல்கள் பூமொட்டுடன் தாழ்ந்துள்ளன.

மேற்கில், நடைத் தொடக்கத்திலுள்ள கூரையில் காணப்படும் முச்சதுரப் பதக்கத்தின் உட்சதுரம் கிளிகள் கொத்தும் தாமரையுடன் விளங்க, இடைச்சதுரம் 12 இராசிகள் சூழ விளங்கும் நான்முகன், சிவபெருமான், திரிபுராந்தகர், மகாலட்சுமி சிற்பங்களைக் கொண்டுள்ளது. வெளிச்சதுரம் நடுவிலும் நான்கு மூலைகளிலும் எண்திசைக் காவலர்கள் கொண்டு, அவர்களுக்கு இடைப்பட்ட நிலையில் நாய், யானை, பூனை, குதிரை, குரங்கு, மான், ஆடு, எருது, கழுதை, சிங்கம், எலி, பாம்பு எனப் பல விலங்கினங்களைக் கொண்டு, விலங்கு நேயச் சதுரமாக மலர்ந்துள்ளது.

உள்சுற்று வாயிலுக்கு நேரிருக்குமாறு உள்ள கொடிமரம் அடைக்கலங்காத்தான் முத்தரையர் வேண்டுதல்படி அவர் தம்பியர் நாகமுத்து, சின்னச்சாமி ஆகியோர் செய்தளித்தது என்பதை அதிலுள்ள கல்வெட்டுத் தெரிவிக்கிறது.21 அடுத்துப் பலித்தளம், நந்தி அமைய, இரண்டு தூண்கள் தாங்கும் பெருஞ் சுதைமுகப்பு. அதன் மேற்பகுதி நடுவில் சுவஸ்திகத்தில் நந்தி அணுக்கரும் வலப்புறம் பிள்ளையாரும் இடப்புறம் உமையும் நின்றகோலத் திலிருக்க, விஷ்ணுவும் திருமகளும் திருவாசிக்கு வெளிப்புறத்தே வாயிற்காவலர்களுடன் காட்சிதருகின்றனர். மேலே கின்னரிகள். கீழே மற்றொரு வரிசையாக கருடர், பைரவர், முனிவர் எழுவர், காளி, நான்முகன் உள்ளனர். அடுத்துள்ள ஆறு தூண்கள் கொண்ட நடைவிரிவின் தரைப்பகுதியில் பாவப்பட்டுள்ள கற்கள், அவற்றை அளித்த கொடையாளிகளின் பெயர்களைக் கொண்டுள்ளன.22 விரிவின் வடபுற அறையில் கோயில் வாகனங்களும் சந்திரசேகரர், பிச்சைத்தேவர், சோமாஸ்கந்தர், தேவியருடன் முருகன், முனையடுவார், உருத்திர பசுபதியார் உள்ளிட்ட



செப்புத்திருமேனிகள் சிலவும் உள்ளன. உள் சுற்று வாயிலைப் பேரளவிலான காவலர்கள் காக்கின்றனர்.

## உள்சுற்று

மேற்கில் விரிவு பெற்றுள்ள உள்சுற்று வெளிச்சுற்றுப் போலன்றி நான்கு திசைகளிலும் மாளிகைப்பத்தி கொண்டுள்ளது. வடகிழக்கு மாளிகைப்பத்தியில் அண்மைக்காலக் கலைமகளும் பிற்சோழர் காலக் கொற்றவையும் உள்ளனர். கலைமகள் சுகாசனத்தில் வீணை வாசிக்கச் சிதைந்துள்ள கொற்றவை சமபங்கத்தில் உள்ளார். வடக்கு மாளிகைப்பத்தியின் முதற்பாதியில் ஆடவல்லானும் உமையும் செப்புத்திருமேனியராய்த் தெற்கு நோக்கி எழுந்தருளியுள்ளனர். அடுத்துள்ள சுதையாலானமகாலட்சுமி

கிழக்குப் பார்வையர். வடக்கு மாளிகைப்பத்தியின் இரண்டாம் பகுதி இறைவன் விமானத்தையும் முகமண்டபத்தையும் பார்த்தவாறு உள்ளது. அதில் முருகன் தேவியருடன் உள்ளார். அவரின் வலப்புறம் பிள்ளையார். இடப்புறம் ஒன்பான்கோள்களுக்கான தனித் திருமுன்.

கிழக்குப் பத்தியில் சூரியன், பைரவர்கள், நாகர்கள், பிள்ளையார்கள், இலிங்கங்கள், முனிவர்களுடன் அய்யனார் என்ற சுட்டலுடன் இருந்த சுகாசன சிவபெருமான் தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில் இதுவரை காணப்படாத அரியதொரு கருவியுடன் விளங்குவதை அறியமுடிந்தது.23 தெற்குப் பத்தியின் கிழக்குக் கோடியில் மடைப்பள்ளியும் கிணறும் உள்ளன.63 நாயன்மார்களின் சிற்பங்கள் உள்ள இப்பகுதியில் சேக்கிழாரும் இடம்பெற்றுள்ளார். அடுத்துப் பிடாரியும் பைரவி என்ற சுட்டலுடன் சாமுண்டியும் அமைய, தென்மேற்குப்பகுதி அறைகள் வெறுமையாக உள்ளன.

உள்சுற்று நடையின் வடகிழக்கில் சண்டேசுவரர் திருமுன் உள்ளது. பாதபந்தத் தாங்குதளத்தின் மீது உறுப்பு வேறுபாடற்ற நான்முக அரைத்தூண்கள் தழுவிய சுவருடன் கூரையுறுப்புகள் பெற்று விளங்கும் இத்திருமுன்னில், பிற்சோழர் காலச் சண்டேசுவரர் சுகாசனத்தில் உள்ளார். கிழக்கு, வடக்கு, மேற்குச் சுவர்களில் கல்வெட்டுகள்24 கொண்டுள்ள இத்திருமுன், சிறு முன்றில் பெற்றுள்ளது. நடையின் தெற்குத் திருமுன்னில் அமிர்தகடேசுவரர் எனும் இலிங்கத்திருமேனி காட்சிதருகிறது. முறையான உறுப்புகள் இன்றிக் கட்டப்பட்டுள்ள, கல்வெட்டுப் பெற்ற இத் திருமுன்னின் தென்கோட்டத்தில் ஆலமர்அண்ணல் முன்றில் பெற்று வீற்றுள்ளார்.25 பாதபந்தத் தாங்குதளத்துடன், ஒருதள நாகர விமானமாய்த் தென்புறத்துள்ள திருமுன்னில்இலலிதாசனத்திலுள்ள கரண்டமகுடப் பிள்ளையாரின் முன்கைகளில் வலப்புறம் உடைந்த தந்தமும் இடப்புறம் மோதகமும் அமைய, பின்கைகளில் இடப்புறம் அக்கமாலை. வலக்கைப் பொருளை அறியமுடியவில்லை. இடம்புரித் துளைக்கையிலும் மோதகம்.

(தொடரும்)

# கோவிலூர் ஆதீன வெளியீடுகள் கோவிலூர் புதையல்கள் - 15

# திருக்களர் ஆண்டவர் என வழங்கும், ஸ்ரீ வீரசேகர ஞாந தேசிக சுவாமிகள், புகழ் உரை ரச மஞ்சரி

- நூல் அறிமுகம்



- கு. அன்பு மெய்யப்பன்,
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 3.

திருக்களர் வீரசேகர ஞான தேசிக சுவாமிகளின் 50வது வருட குரு பூசையில் 29-05-1961இல் இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது. மதுரை V.சுப்புராயலு அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. 34 பெரியார்கள் திருக்களர் ஆண்டவரின் பெருமைகளை விரித்துக் கூறியுள்ளனர். அதனைத் தொகுத்து இந்நூலில் பதிப்பித்துள்ளார் திருப்பூவணம் காசிகா நந்த ஞானாசாரிய சுவாமிகள்.

இந்நூலில் பல படங்கள் இடம்பெறுகின்றன. திருக்களர் ஆண்டவர், சமாதி ஆலயம், கோவிலூர் ஆண்டவர் தொடங்கி மகாதேவ ஞானதேசிகர் வரை யிலான படங்கள், வீர சுப்பைய ஞானதேசிகர், நாராயண சுவாமிகள், ஏகாம்பரக் குப்பம் சிவாநந்த சுவாமிகள், கட்டுரை எழுதிய துறவிகள் படங்கள் 20, கட்டுரை எழுதிய இல்லற அன்பர்கள் படங்கள் 9, ஆக மொத்தம் 43 படங்கள் இந்நூலில் இடம் பெறுகின்றன.

அறுபதுகளில் பெரும் புகழ் வாய்ந்த பலரது கட்டுரைகளால் இந்நூல் நிறைந்துள்ளது.

**34 பெரியோர்களது பெயர்கள் கீழ்வருமாறு:**

1. திருப்பூவணம் காசிகாநந்த ஞானாசாரிய சுவாமிகள்.
2. புதுச்சேரி, வேதாந்த சுவாமிகள்
3. திருஅண்ணாமலை, இராமநாத சுவாமிகள்
4. சிதம்பரம்–சபாபதிச் சுவாமிகள்
5. காளையார் கோவில்–அருணாசல சுவாமிகள்
6. திருவாரூர்–சண்முகாநந்த சுவாமிகள்
7. சங்கேந்தி–சதாசிவ அடிகளார்
8. திருக்களர் – கிருஷ்ணாநந்த சுவாமிகள்
9. திருவையாறு – நாராயண சுவாமிகள்
10. வேதாரணியம் – மகேசுவராநந்த சுவாமிகள்
11. மதுரை – சின்மயானந்த சுவாமிகள்
12. கோவிற்பட்டி – விமலாநந்த சுவாமிகள்
13. துறையூர் – பெருமாள் ஐயா
14. நன்னிலம் – கோவிந்த சுவாமிகள்
15. வியாசர்பாடி – சுப்பைய சுவாமிகள்
16. திருச்சிராப“பள்ளி – அத்வைதாநந்த சுவாமிகள்
17. கோவிலூர் – சோமசுந்தர ஐயா
18. ஆத்தூர் – சண்முகாநந்த ஐயா
19. இளையான்குடி – சிவாநந்த சுவாமிகள்
20. காஞ்சிபுரம் – போபாலாநந்த சுவாமிகள்
21. திருவாரூர் – கிருஷ்ணாநந்த சுவாமிகள்
22. மதுரை குட்டைய மடம் சங்கர சுவாமிகள்
23. தஞ்சாவூர் – கிருஷ்ண சுவாமிகள்
24. மதுரை – ஜகவீர பாண்டியக் கவிராஜர்–25. தேவகோட்டை, பாலகவி, ராமநாதன் செட்டியார்
26. தேவகோட்டை, க.முரு. கரு.ராம.சோம. ராமநாதன் செட்டியார்
27. மதுரை, மினாட்சி மில், கரு.முத்து.தியாகராஜன் செட்டியார்
28. பலவான்குடி, ராம.கு.ராமசாமி செட்டியார்
29. அமராவதிபுதூர் – ராய. சொக்கலிங்கம் செட்டியார்
30. காரைக்குடி – சா. கணேசன் செட்டியார்
31. கல்லல் – ஆ.மு.ஆ. முருகப்ப செட்டியார்
32. தேவகோட்டை – கி.கரு.ராம. சாமிநாதன் செட்டியார்
33. கோட்டையூர் – அழ. அண்ணாமலை செட்டியார்

**34. காரைக்குடி – மெ.செ.ச.மு.சித. முத்துராமன் செட்டியார்.**

கம்பனடிப்பொடி சா. கணேசனார் அவர்கள் அவரது புகழுரையில், 4 வெண்பா பாடல்களைப் பாடியுள்ளார். அனைத்தும் அழகான எளிதாகப் பொருள் விளங்கக் கூடிய பாடல்கள். அவை,

1. பேர்ஒப்பார் சில்லோர், பிறந்து வளர்ந்திட்ட,
ஊர்ஒப்பார் பல்லோர் உளராவர் ஸ்ரீ சீரப்பும்
வீரப்ப ஞானியைப்போல் மெய்த்துறவோர் யாவருளர்,
நேர்ஒப்பார்? சற்றே நினை.

2. எண்ணில் மனம் இனிக்கும், ஏத்திழலோவாய் இனிக்கு
நண்ணி அருகுஅணைந்து நாம்காணில் ஸ்ரீ கண்இனிக்கும்,
சேர்ஒப்புஒன்று இல்லாத் திருக்களர் ஆண்டவராம்
வீரப்ப சாமிகளின் மெய்.

3. இத்தரையில் தோன்றி எழிற்கோவி லூர்படைத்த
முத்திராம லிங்க முழுஞான அத்துவிதச்
செம்மல்அருள் பெற்று, திருக்களர் ஆண்டவர்தம்
மொய்ம்மலர்த்தாள் வைப்போம் முடி.

4. வாழிதிரு நான்மறை, வாழி உபநிடதம்
வாழிகலைக் கோவிலூர் வன்மரபு ஸ்ரீ வாழியரோ,
ஐயன் திருக்களர் ஆண்டவராய் ஓங்கிவளர்
மெய்யன் திருநாம மே!

தமிழ்க் கடல் இராய. சொ அவர்கள் "நடையறாப் பெருந் துறவி" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். ஏன் இத்தலைப்பை வைத்தேன் என்று ராய. சொ. அவர்கள் ஒரு சிறந்த விளக்கத்தைத் தருகிறார்.

"இத்தலைப்பு நான்கு சொற்கள் கொண்ட ஒரு தொடர். (நடை – அறா – பெரும் – துறவி) நடை என்றால் ஒழுக்கம், அறா என்றால் நீங்காத, பெரும் என்றால் பெரிய, துறவி என்றால் பற்று விட்டவர். ஆக, ஒழுக்கம் நீங்காத பெரிய துறவி என்பது பொருள். இச்சொல் தொடர், அப்பர் சுவாமிகளைப் பற்றிக் காஞ்சிப் புராணத்தில், மாதவச் சிவ ஞாந சுவாமிகளால் பாராட்டிப் போற்றப்படுவது. "நடை அறாப்பெருந் துறவு" என்றால், நடை ஆற்ற சிறு துறவும் உண்டோ என்ற வினா எழலாம். ஆம். நடையற்ற சிறு துறவு மலிந்து கிடந்தமையாலேயே




“நடையறாப் பெருந் துறவு” என்று சிவ ஞான யோகிகள் கூறுவாரா யினர். ஒழுக்கம் நீங்கிய சிறு துறவுகளே யாண்டும் பெருகி நிற்கக் காண்கிறோம். உள்ளத் துறவு பூண்டார் அரியர். காவி ஆடை புனைந்தவர் அனைவரும் உள்ளத் துறவு உடையார் எனச் சொல்லிவிடல் இயலாதது. உள்ளத் துறவு அத்தனை எளிதன்று. ஆனால், உள்ளத் துறவி, நம் வீர சேகர ஞான தேசிக சுவாமிகள் என்று அழகாக விளக்குகிறார்.

மேலும், பல அறிஞர்களில் சிறந்த கருத்துக்களால் நிறைந்துள்ளது இந்நூல். ஐந்தாம் பட்டம் சீர் வளர் சீர் வீரசேகர ஞான தேசிகரின் வாழ்வில் நிகழ்ந்த பல அரிய நிகழ்வுகளை இந்நூல் வெளிக்கொணருகிறது. குறிப்பாக சுவாமிகளின் ஜாதகம் இந்நூலில் இருக்கிறது. வீரசேகரரின் வாழ்வை முழுமையாக உணர இந்நூல் வழிவகுக்கிறது.

அன்பிருக்கு நல்ல அருளிருக்கு மெய்ஞ்ஞாந,
இன்பிருக்கு மென்றே யியம்புக – கொன்பெருக்கும்
தென்கழனி வீரப்பன் தெய்வத் திருக்களரான்,
மன்கழலைப் போற்ற வரின்.

–திருவையாறு ஸ்ரீ நாராயண சுவாமிகள்.

நூலைப் படிக்க கீழ்க்காணும் தொடுப்பினைத் தொட்டு வாசிக்கவும்.



# காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி பாடல் நலம்



**– வாகீச கலாநிதி கி.வா. ஜகந்நாதன்**

அறிவினால் பாராமல் ஆண்டவன் அருளினால் பார்த்தால் இந்த விரிந்த பார்வை உண்டாகும். முதலில் வெவ்வேறாகப் பார்த்துப் பக்தி செய்து, பிறவற்றை மறந்து ஒரு வடிவத்திலே லயித்து ஈடுபட்டு அநுபவம் பெற்று, பிறகு புறத்தே பார்த்தால் இதுவே அவை யாவும் என்று புலனாகும். முதலில் பலவாகத் தோற்றிய தோற்றம் இப்போதும் இருக்கும். ஆனாலும் அப்போது வெவ்வேறு பொருளாகத் தோற்றியவை இப்போது ஒரே பொருளின் வெவ்வேறு வடிவாகத் தோற்றும். கண்ணினால் கண்டபோது வெவ்வேறாகத் தோன்றிய பிஸ்கோத்து, கடித்துப் பார்த்தபோது ஒன்றின் வெவ்வேறு வடிவம் என்று தெளிவானது போலத் தெளிவு பிறக்கும்.

காரைக்காலம்மையாருக்கு இந்தத் தெளிவு அநுபூதியினால் உண்டாயிற்று. "நான் உன்னை எவ்வாறு, இதுதான் என்று சுட்டிக் காட்டுவது எல்லாம் நீயாக இருக்கறாய். உன் பண்பு முழுவதையும் அறியும் வல்லமை எனக்கு இல்லையே! நீ எப்படி எப்படி எல்லாம் இருக்கிறாய் என்று தனித் தனியே சொல்லி எல்லை வரையறுக்க முடியுமா?' என்று வியக்கிறார்.

அவர் முதலில் கடவுளைச் சிவபெருமானாகப் பார்த்தவர்; கைலாசபதியாகக் கண்டவர். இராவணன் கயிலை மலையைச்

செருக்கினால் எடுக்க, அவனை ஒரு விரலால் அழுத்தின பெருமானைக் கண்டு அன்பு செய்தவர். அன்று அவனை அவ்வாறு கண்டு, எம்மான் என்று அணுகிப்பக்தி செய்தார். அதன் பயனாக அநுபூதி பிறந்தது. அன்று கண்ட அவனை இன்று எப்படிக் காணுகிறார்? யார்



என்று சொல்கிறார்?

முரண் அழியத்
தானவனைப் பாதத் தனிவிரலால்
செற்றானை
யான்அவனை, எம்மானை
இன்று.

தானவனாகிய இராவணனுடைய வலிமை அழியும்படி தன் திருப்பாதக் கட்டைவிரலால் அழுத்தினான் இறைவன். அவனையே, எங்கள் தெய்வம்; எம்பெருமான்' என்று போற்றி வழிபட்டார் அம்மையார். அவனை இப்போது எவ்வாறு சொல்கிறார்?

“நான் என்னவென்று சொல்வது?' என்று திகைக்கிறார். வெவ்வேறு பண்புகளுடன் வெவ்வேறு உருவத்தில் நீவிளங்குகிறாய். பண்பு அற்ற பாழாகவும் இருக்கிறாய். உன் பண்புகள் யாவும் தெரிந்தால் ஒவ்வொரு பண்பையும் உடைய ஒவ்வொரு மூர்த்தியாகச் சொல்லிக்கொண்டே வரலாம்.

நானோ உன் பண்புகள் யாவற்றையும் உணராதவள்'' என்கிறார்.

## பண்பு உணர மாட்டேன்

"ஆகவே நான் எப்படிச் சொல்லட்டும்? எல்லாவற்றையும் இறுதிக் காலத்தில் சங்காரம் செய்யும் ஹரன் என்று சொல்லட்டுமா? அல்லது உலகத்தைப் படைக்கும் நான்முகன் என்று சொல்லட்டுமா? இப்படியே சொல்லிக்கொண்டு போகலாம். அதற்கு எல்லை ஏது? யாராலும் உணர்வரிய, எல்லா வடிவங்களுக்கும் மேலான பரம்பொருள் என்று சொல்லட்டுமா? எப்படிச் சொன்னாலும் பொருந்தும். ஆனால் அவ்வளவோடு நின்றுவிட முடியுமா? வெவ்வேறுவடிவாக வெவ்வேறு பண்புடையவனாக நீ நிற்கும் கோலம் ஒன்றா இரண்டா? உன் குணங்களையும் எண்ணி அளவிட முடியாது; உன் கோலங்களையும் எல்லைகட்டிச் சொல்லிவிட முடியாது; உன் திருநாமங்களையும் எண்ணிக்கையில் அடக்கிச் சொல்லிவிட முடியாது. நான் எப்படிச் சொல்வேன்!" என்றார்.

## அரன் என்கோ! நான்முகன் என்கோ! அரிய பரன்என்கோ:

"எப்படிச் சொன்னாலும் தகும்; ஆனால் எப்படி சொன்னாலும் போதாது. முன்பு உன் வடிவத்தையும் பெயரையும் எளிதில் சொல்லி விட்டேன். அன்று என் பார்வை குறுகியதாக இருந்தது. இன்று எப்படிச் சொல்வது என்று தெரியாமல் மயங்குகிறேன்'' என்கிறார்.

அரன் என்கோ? நான்முகன் என்கோ! அரிய
பரன் என்கோ? பண்புணர மாட்டேன் முரண் அழியத்
தானவனைப் பாதத் தனிவிரலால் செற்றானை
யான் அவனை எம்மானை இன்று.

அரன்அழிக்கும் கடவுள். நான்முகன் படைக்கும் கடவுளாகிய பிரமதேவன். என்கோஎன்பேனா? அரிய பொறிகளுக்கும் அறிவுக்கும் அறிவரிய, பரன்எல்லோருக்கும் மேலான பரம்பொருள் என்னும்



நிலையில் உள்ளவன். பண்பு அநந்த கல்யாண குணங்கள். உணரமாட்டேன் உணரும் ஆற்றல் இல்லாத நான். முரண்வலிமை; மாறுபாடான செருக்கு என்பதும் ஆம். தானவன் என்பது அசுரனைக் குறிக்கும் சொல். இங்கே அரக்கனாகிய இராவணனைக் குறித்தது. அவன் செருக்கினால் திருக்கயிலையைத் தூக்கியபோது இறைவன் ஒரு விரலால் அமிழ்த்தி அவனை நசுக்கினான். தனிவிரல் ஒற்றை விரல்; ஒப்பற்ற விரல்; என்றது கட்டை விரலை: செற்றான் ஒறுத்தான்.

செற்றானை, அவனை, எம்மானை, பண்புணர மாட்டேனாகிய யான் இன்று அரன் என்கோ, நான்முகன் என்கோ, அரிய பரன் என்கோ என்று அந்வயம் செய்து பொருள் கொள்ள வேண்டும்.

அவனை என்பது அவன் என்று சுட்டும் கடவுளை என்று பொருள் கொள்ள நின்றது. இன்று என்றது அவனருளால், அநுபவம் பெற்ற செவ்வியைச் சுட்டியது.

‘அன்று அரன் என்று சுட்டி அதனோடு நின்றேன்; இன்று இன்னான் என்று சுட்ட முடியாத நிலையில் இருக்கிறேன்” என்பது குறிப்பாகப் புலப்பட்டது.

இறைவன் பலவகைத் தெய்வமாகவும் இருப்பவன் என்பது கருத்து.)

இது அற்புதத் திருவந்தாதியில் உள்ள 18ஆவது பாடல்.

# அரனே பரமென்றுணர்த்திய சுதர்சனர்



**தேனம்மை இலக்குமணன்,**
காரைக்குடி

பரம வைணவக் குடும்பத்தில் பிறந்த ஒருவரை அரனே பரம் என்று சொல்ல வைக்க முடியுமா. பரம வைணவரை, அப்படிச் சொல்ல வைக்க மட்டுமல்ல அரனே பரம் என்று அவரை உணர வைக்கவும் முடியும் என்று நிரூபித்தார் ஒருவர். அவர்தான் சுதர்சனர் என்னும் அரதத்தர். சிவனே அவருக்கு அரதத்தர் என்னும் இப்பெயரைச் சூட்டினார் என்பதெல்லாம் இறைச் செயல்தானே.

கஞ்சனூர் என்னும் ஊரில் பதினான்கு கோத்திரத்தைச் சார்ந்த உதித்த வைணவர்கள் பலர் வசித்து வந்தார்கள். அவர்களுக்குத் திருமாலே முழு முதல் தெய்வம். எனவே மாற்று சமயமான சைவத்தை அவர்கள் நிந்தித்து வந்தார்கள். அவர்களுள் காசியப கோத்திரத்தைச் சேர்ந்த வாசுதேவர் என்ற பஞ்சாத்திர வைணவரும் இருந்தார். அவரது மகனாகப் பிறந்தவர்தான் சுதர்சனர்.

முன்பொரு சமயம் நடந்த தேவாசுர யுத்தத்தில் விஷ்ணுவின் சக்ராயுதம் அசுரகுரு சுக்ராச்சாரியாரின் மனைவி சுகீர்த்தியையும் வீழ்த்தியது. அப்போது அங்கு வந்த சுக்ராச்சாரியார் அமிர்தசஞ் சீவினி மந்திரத்தை ஜெபித்து மனைவியை உயிர்ப்பித்ததோடு தன் மனைவியைக் கொன்ற விஷ்ணு பூலோகத்தில் மனிதனாகப் பிறக்கும் படி சபித்தார். இதன் காரணமாக விஷ்ணுவின் அம்சமான சுதர்சனர் வாசுதேவரின் மகனாக மண்ணில் பிறப்பெடுத்தார்.

குழந்தை சுதர்சனரின் மனதில் சிவபெருமானின் மேல் பக்தி மேலோங்கிஇருந்தது.சுதர்சனருக்குப் பேசும் பருவம் வந்ததுமே, அவர் ”சிவ சிவா””” என்றார். இதைக் கேட்டு வெகுண்ட வாசுதேவர் சுதர்சனரைக் கண்டித்தார். அவர் கண்டிப்பு அதிகமாக ஆக



சுதர்சனரோ அக்னீஸ்வரர் என்ற நாமம் உடைய சிவ பெருமான் ஆலயத்துக்கும் சென்று வந்தார். இதன் காரணமாகத் தந்தையின் கோபத்தை அவர் அதிகப்படுத்தினார். அவரது அரன் பக்தியை மாற்ற குழந்தை சுதர்சனருக்கு உபநயனம் செய்துவித்து, ”இனி நீ நாராயண நாமத்தைத்தான் உச்சரிக்க வேண்டும்” என்று கட்டளையிட்டார் அவரின் தந்தை வாசுதேவர்.

ஆனால் சுதர்சனரோ அக்னீஸ்வரர் ஆலயத்துக்கு அன்றைய மதியமே சென்று மாத்யானிகம் செய்து பஞ் சாட்சரத்தை ஓதினார். கோபம் இன்னும் அதிகமாக சுதர்சனரை அவர் தந்தை வீட்டை விட்டுத் துரத்தினார். கோயிலுக்குச் சென்று தங்கிய சுதர்சனர் அங்கேயே இரவு சிவபாராயணம் செய்தபடி உறங்கினார். அவ்வாறு உறங்கியவரின் கனவில் சிவன் தட்சிணாமூர்த்தி ரூபமாய்க் காட்சி தந்து வேதாகம புராணத்தையும் தர்ம சாஸ்திரத்தையும் உபதேசித்து அரனால் தத்து எடுக்கப்பட்டவர் என்ற பொருளில் “அரதத்தர்” என்ற நாமத்தைச் சூட்டினார்.

மறுநாள் விடிந்ததும் வீட்டிற்கு வந்த அரதத்தர் தந்தையிடம் ”சிவனே பரம்” என்று வேதப் பொருள் உரைத்தார். பல்வேறு விதமாக வாதம் புரிந்து சுதர்சனர் தாம் கண்ட உண்மைப் பொருள் பற்றிக் கூறியும் அவரது தந்தை வாசுதேவர் அதை எல்லாம் மறுத்தார். மேலும் “ சுதர்சனா, நீ கூறிய அனைத்தும் உண்மை என்றால் பழுக்கக் காய்ச்சிய இரும்பின் மேல் ஏறி நின்று அது சத்தியம் என்று கூற வேண்டும்” என்று கூறினார்.

அரதத்தரும் சம்மதிக்கவே இருவரும் ஆன்றோர் சான்றோர், சைவ வைணவ அடியார்கள் புடை சூழ வரதராஜப் பெருமாள் ஆலயத்துக்குச் சென்றார்கள். அங்கு கருடாழ்வார் சன்னதியின் முன்பு




நெருப்பில் இடப்பட்டுச் செம்பவளத் தட்டாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தது ஒரு இரும்புப் பீடம். சுற்றியிருப்போரெல்லாம் பதைக்கப் பதைக்க குழந்தை சுதர்சனர் அதன் மேல் ஏறி நின்று சிவபெருமான் தனக்கு உரைத்த வேத சாஸ்திரங்களைக் கூறி சிவனே பரம் என்று உறுதிபடக் கூறினார்.

இதைக் கேட்டு விண்ணவர்கள் பூமாரிப் பொழிய அரதத்தரின் தந்தையும் மகன் சுதர்சனரை அரதத்தராக ஏற்றுக் கொண்டார். அவருக்கு உரிய பருவம் வந்ததும் சுப்ரதீபர் என்பவரின் மகள் பங்கஜவள்ளி என்பவளுடன் திருமணம் நடந்தது. இவர்களுக்கு மகாதேவன், நீலகண்டர், சங்கரர், சந்திரசேகரர், சாம்பசிவன், மகாலிங்கம், கோமுதீசன் என்று ஏழு மகன்களும் கற்பகம், மீனாக்ஷி என்று இரண்டு மகள்களும் பிறந்தார்கள். தினமும் காவிரியில் நீராடிப் பஞ் சாட்சரம் ஓதுவதும், சிவபூஜை செய்வதுமாய் வாழ்ந்து வந்தார் அரதத்தர்.

அவ்வூரில் தேவசம்பு என்ற அந்தணர் ஒருமுறை புல்கட்டு ஒன்றைக் கொண்டு வந்து கட்டுத்துறையில் போடும் போது அது இளங்கன்றின் மேல் பட்டு, புல்கட்டின் சுமையால் அந்தக் கன்று இறந்தது. அதைக் கண்டு பதறிய அவர் சிவ சிவ எனக் கூறினார்.

இதனைக் கண்டவர்கள் கன்று இறந்த பாவம் போக காசிக்குச் செல்லவேண்டும் என்றனர். தேவசம்பு காசி செல்ல பொருள் வசதி இல்லாதவர். அவரால் காசிக்குச் செல்ல இயலாது. எனவே அவர் அரதத்தரிடம் சென்று அவரை வணங்கித் தான் அறியாமல்

செய்த செயலுக்காகக் காசிக்குப் போவதென்பது ஏழையான தன்னால் இயலாதென்பதைக் கூறித் தன் பாவம் போக வழி கேட்டார். அரதத்தரோ அறியாமல் செய்த பாவம் அவரைச் சேராது என்றும் உடனே சிவன் நாமத்தைக் கூறியதால் அவருக்கு வர இருந்த பாவமும் நீங்கியது என்று சொன்னார்.

ஊரார் ஏற்காமல் போகவே சிவபெருமான் ஆலயத்தில் உள்ள நந்தீஸ்வரருக்கு ஒரு பிடி அருகம்புல்லைக் கொடுக்கும்படிக் கூறினார் அரதத்தர். பயபக்தியோடு அந்த அந்த அந்தணர் ஒரு பிடி அருகம்புல்லைக் கொடுக்க அந்தக் கல் நந்தியோ அருகம்புல்லை உண்டது. இதைக் கண்டு வியந்த ஊரார் சிவநாமத்தின் சிறப்பையும் அரதத்தரையும் போற்றினர்.

அரதத்தரின் தமக்கைக்கு கங்காதரன் என்று ஒரு மகன் இருந்தான். பிறவியிலேயே கால் ஊனமாகப் பிறந்தவன் . அவனுக்குக் காசி சென்று விசுவநாதரைத் தரிசிக்க ஆசை. அரதத்தரிடம் அவன் தன் வேண்டுகோளைக் கூற அவரோ சிவ நாமத்தைக் கூறிக் காவிரியில் மூழ்குமாறு கூறினார். அவனும் நம்பிக்கையுடன் சிவநாமத்தைக் கூறியபடி காவிரியில் மூழ்கி எழும்போது அது கங்கையாகி இருந்தது. அதன் கரையிலோ காசி விஸ்வநாதர் ஆலயம் தென்பட்டது. மனமகிழ்வுடன் அவன் காசி விசுவநாதரைத் தரிசித்துத் திரும்பக் கங்கையில் மூழ்கி காவிரியில் எழுந்து கஞ்சனூர் வந்தடைந்தான்.

இவ்வாறு சிவனே பரமென்று உலகோருக்கு உணர்த்திய அரதத்தர் தைமாதம் வளர்பிறை பஞ்சமி நாளில் சிவனருளால் கைலாயம் சென்றடைந்தார். விஷ்ணுவே சுதர்சனராகப் பிறந்ததும் அரதத்தராக சிவனால் நாமம் சூட்டப்பட்ட அவர் சதுர்வேத சங்கிரகம் அல்லது சுருதி சூக்தி மாலை, பஞ்ச ரத்ன மாலை, ஹரிஹர தாரதம்ய ஷட்கம் ஆகியன இயற்றி சிவனின் மகிமையை உலகோர் அறியும்படிச் செய்ததும் வியத்தகு இறைச் செயல்கள்தானே.

காசிக்குச் செல்லாமல் காசியின் காட்சியை அவரவர் இருப்பிடத்திலேயே காணும் வசதி தற்போது வந்துவிட்டது. அரதத்தரின் காசியை, கங்கையை தமிழகத்தில் காணும் முயற்சி தற்போது கோவிலூரிலும் சாத்தியமாக உள்ளது. அனைவரும் கோவிலூர் அருள் தரு தென் சபாநாயகர் நடராசர் திருக்கோயிலில் காசிக் காட்சியை விரைவில் கண்டு புண்ணியம் பெறலாம்

## சிவாலயங்களின் சிறப்புகள் - 12



வே.இராமசாமி, B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

சிவனேச செல்வர்களுக்கு பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

# நவகைலாயம் பகுதி- 1

தமிழகத்தில் தாமிரபரணி கரையில் அமைந்துள்ள ஒன்பது சிவாலயங்களை நவகைலாயம் என்று அழைக்கிறோம். ஒன்பது சிவாலயங்களும் தூத்துக்குடி மற்றும் திருநெல்வேலி மாவட்டங்களில் அமைந்துள்ளது இந்த ஒன்பது சிவாலயங்களுக்கும் சென்று சிவனை வழிபட்டால் பாவங்கள் விலகி முக்தி கிடைக்கும் என்பது ஐதீகம்.

### ஒன்பது சிவாலயங்கள்

1. சூரியன் பாபநாசநாதர் கோவில் பாபநாசம்

2. சந்திரன் சேரன்மாதேவி கைலாசநாதர் கோவில் சேரன்மாதேவி

3. செவ்வாய் கோடகநல்லூர் கைலாசநாதர் கோவில் கோடகநல்லூர்

4. ராகு குன்னத்தூர் கோத பரமேஸ்வரர் கோவில் குன்னத்தூர்

5. குரு முறப்பநாடு கைலாசநாதர் கோவில் முறப்பநாடு

6. சனி ஸ்ரீவைகுண்டம் கைலாசநாதர் கோவில் ஸ்ரீவைகுண்டம்

7. புதன் தென்திருப்பேரை கைலாசநாதர் கோவில் தென்திருப்பேரை

8. கேது ராஜபதி கைலாசநாதர் கோவில் ராஜபதி

9. சுக்கிரன் சேர்ந்தபூமங்கலம் கைலாசநாதர் கோவில் சேர்ந்தபூமங்கலம்

இவற்றில் முதல் மூன்று தலங்கள் மேல் கைலாயம் என்றும், அடுத்த மூன்று தலங்கள் நடுகைலாயம் என்றும், கடைசி மூன்று




தலங்கள் கீழ் கைலாயம் என்றும் அழைக்கப்படுகின்றன. இவற்றுள் குன்னத்தூர் தவிர மற்ற அனைத்து தலங்களிலும் ஈசன், கைலாசநாதர் என்ற திருநாமத்துடனேயே வீற்றிருந்து அருள் செய்கிறார்.

## நவகைலாயம் உருவான புராண வரலாறு

அகத்தியரின் சீடர்களில் ஒருவரான உரோமச முனிவர், சிவ பெருமானை நேரில் தரிசிக்கவும், அதன் மூலம் முக்தி அடைய வேண்டும் எனவும் விரும்பினார். இதற்காக தனது குருவான அகத்தியரிடம் வழி கேட்டார். அதற்கு பதிலளித்த அகத்தியர், தாமிரபரணி ஆற்றில் 9 தாமரை மலர்களை மிதக்க விடு. அந்த 9 மலர்களும் எந்த இடத்தில் கரை ஒதுங்குகின்றனவோ அந்த இடங்களில் சங்கு மூலம் நீராடு. தாமரைகள் ஒதுங்கிய இடத்தில் நவகிரகங்களின் வரிசையில் சிவ லிங்கங்களைப் பிரதிஷ்டை செய்து, சிவனை வழிபட்டால், சிவ பெருமானின் காட்சி கிடைக்கும். முக்தியும் கிடைக்கும் என்றார். அகத்தியர் சொன்ன படியே 9 தாமரை மலர்களை தாமிரபரணி ஆற்றில் மிதக்க விட்டு, அவைகள் கரை ஒதுங்கிய இடங்களில் நீராடி, உரோமச முனிவர் முக்தி பெற்றதாக சொல்லப்படுகிறது. அவர் உருவாக்கிய இந்த ஒன்பது சிவாலயங்களே நவ கைலாயங்கள் என அழைக்கப்படுகின்றன.

- முதல் மலர் பாபநாசத்திலும் (சூரிய தலம்)
- இரண்டாவது மலர் சேரன்மாதேவியிலும் (சந்திரன்)
- மூன்றாவது மலர் கோடகநல்லூரிலும்(செவ்வாய்)
- நான்காவது மலர் குன்னத்தூரிலும் (ராகு)
- ஐந்தாவது மலர்முறப்பநாட்டிலும் (குரு)
- ஆறாவது மலர் ஸ்ரீவைகுண்டத்திலும் (சனி)
- ஏழாவது மலர் தென் திருப்பேரையிலும் (புதன்)

🌺 எட்டாவது மலர்ராஜபதியிலும் (கேது)

🌺 ஒன்பதாவது மலர் சேர்ந்தபூமங்கலத்திலும் (சுக்கிரன்)

கரை ஒதுங்கியது.

அந்த இடங்கள் தான் நவகைலாயம் என்று அழைக்கப்படுகிறது

**1.சூரியன் பாபநாசநாதர் கோவில் பாபநாசம்**

**அம்சம்:** சூரியன்

**நட்சத்திரம்:** கார்த்திகை, உத்திரம்

**மூலவர்:** ஸ்ரீ பாபநாசர் என்ற கைலாச நாதர். மூலவர் வயிராச லிங்கம், பழமுறை நாயகர், முக்காளாலிங்கர், பரஞ்சோதிலிங்கர் என்றெல்லாம் வணங்கப்படுகிறார்.

**அம்பாள்:** ஸ்ரீ உலகாம்பிகை

**திருக்கோவில் விருட்சம்:** முக்கிளா மரம்.

**தீர்த்தங்கள்:** தாமிரபரணி, வேத தீர்த்தம், பைரவ தீர்த்தம், கல்யாண தீர்த்தம்.

**சிறப்பு சன்னதிகள்:** கல்யாணசுந்தரர் சன்னதி, புனுகு சபாபதி சன்னதி.

திருநெல்வேலியில் இருந்து சுமார் 45 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது நவகைலாயங்களில் முதலாவது திருத்தலம் பாபநாசம் ஆகும். இது ஒரு தேவார வைப்பு தலம்



மூலவர் ருத்ராட்சத்தினால் ஆனவர். பொதிகை மலையில் உற்பத்தியாகும் தாமிரபரணி ஆறு சமவெளியை அடையும் இடம் தான் பாபநாசம் ஆகும் .சிவபெருமான் தனது திருமண கோலத்தை அன்னை உமையவளுடன் சேர்ந்து ரிஷப வாகனத்தில் அமர்ந்து அகத்திய முனிவருக்கு காட்சியளித்த திருத்தலம்.

இந்தத் தலத்து லிங்கத்திற்கு முக்கிளா லிங்கம் என்ற பெயரும் உண்டு. கருவறையில் ருத்ராட்ச வடிவிலும், பிரகாரத்தில் முக்கிளா மரத்தின் கீழும் பாபநாசர் இருக்கிறார்.







ரிக், யஜுர், சாமம் ஆகிய மூன்று வேதங்களே கிளா மரமாக மாறி இறைவனுக்கு நிழல் தந்தும், அதர்வண வேதம் ஆகாயமாக இருந்தும் இவரை வழிபட்டது. எனவே சிவனுக்கு இந்தப் பெயர் அமைந்ததாம்!

அம்மன் சன்னதிக்கு முன்பு ஒரு உரல் உள்ளது. அதில் மஞ்சள் போட்டு பெண்கள் இடிப்பார்கள் அதை அம்மனுக்கு அபிஷேகம் செய்து பெண்களுக்குப் பிரசாதமாக தருவார்கள் . அபிஷேகிக்கப்படும் மஞ்சள் தீர்த்தத்தைச் சிறிது அருந்தினால், திருமண, புத்திர பாக்கியங்கள் கிடைக்கும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருப்பர் என்பதாக நம்புகின்றனர்.

நமச்சிவாயக் கவிராயர் உலகம்மை அந்தாதி” எனும் அற்புதமான நூலை இங்கு இயற்றினார். “அபிராமி அந்தாதி”யைப் போல் அதியற்புதமான நூல் இது.

விண்டல நின்ற சரற்கால சந்திர சுவேதமுக

மண்டலமும் கையில் மலரொடும் தோளில் வழிந்த ரத்ன

குண்டலமும் பொலி வாலப் பிராய குமாரத்தியாய்

செண்டலர் செங்கை உலகாள் என் நாவில் சிறந்தவளே

அம்மை மீது கவிராயர் பாடிய வேறு பாடல்கள், சிங்கை சிலேடை வெண்பா, இன்னிசைக் கலிப்பா, உலகம்மை பதிற்றுப்பத்து அந்தாதி, உலகம்மை சந்தவிருத்தம், உலகம்மை பிள்ளைத்தமிழ், பாவவிநாச வண்ணம், உலகம்மை அந்தாதி ஆகியன ஆகும்.

ராஜகோபுரத்தை அடுத்து நடராஜர் தனிச்சன்னதியில் ஆனந்ததாண்டவ



கோலத்தில் இருக்கிறார். இவரை, "புனுகு சபாபதி' என்கின்றனர்.

வியாக்ரபாதர், பதஞ்சலி ஆகியோருக்கு ஒரு தைப்பூசத்தன்று நடராஜர் நந்தியின் கொம்புகளுக்கு இடையே நின்று நடன தரிசனம் தந்தார். எனவே இங்கு தைப்பூசத்தில் நந்திக்கு சந்தனக்காப்பு செய்து சிறப்பு பூஜைகள் நடக்கின்றன

**கல்யாணசுந்தரர் சன்னதி:**

இங்கு சுவாமி, அம்மையோடு இடபவானத்தில் அமர்ந்தபடி திருமணக்கோலம் காட்டியருள, முன்னே அதனை தரிசித்தபடி அகத்தியரும் அவர் மனைவி லோபாமுத்ரையும் காட்சிதருகிறார்கள். சுவாமிக்கு குடைபிடித்தபடி குண்டோதரனும் இங்கு உள்ளார். இதுபோன்று ஒரே சன்னதியில் கல்சிற்ப மேனியராய் சுவாமி அம்மையோடு இடபவாகனராய் காட்சியளிப்பது அபூர்வம்.

தினமும் உச்சிக்கால பூஜையின்போது தாமிரபரணி நதியில் மீன்களுக்கு நைவேத்திய உணவுகளைப் படைத்து பூஜைகள் செய்யப்படுகின்றன.

திருக்கோயிலின் ராஜகோபுரம் ஏழு நிலைகளைக் கொண்டு 80 அடி உயரத்தில் காட்சியளிக்கிறது

நடைதிறப்பு காலை 6.00 மணி முதல் 1.00 மணி வரை, மாலை 4.30 மணி முதல் இரவு 8.00 மணி வரை.

(தொடரும்)

## திவ்ய தேச கவிதை தரிசனம்

# திருஇந்தளூர்



அழ. மணிமேகலை,
காரைக்குடி

108 திவ்யதேசங்களுள் இருபத்தியாறாவது திவ்ய தேசம், திருஇந்தளூர். சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது இருபத்தியாறாவது திவ்யதேசமாகும். இத்தலம் மயிலாடுதுறை எனப்படும் மாயவரத்தில் உள்ளது.

தலைச்சங்காட்டுத் தலவரலாற்றில் கூறியுள்ளது போலவே, தச்சன் என்ற அரசனுக்கு இருபத்தியேழு பெண்மக்கள். அம்மன்னர், இருபத்தியேழு நட்சத்திரங்களான இருபத்தியேழு பெண்மக்களையும், சோமவாரத்திற்கு அதிபதியான சோமன், அதாவது திங்கள் எனப்படும் சந்திரனுக்குத் திருமணம் செய்து கொடுத்தார். இருபத்தியேழு பேர்களில், சோமன், ரோகிணியிடம் மட்டும் தனி அன்பு செலுத்தினார். பொறுத்துப் பொறுத்துப் பார்த்துச் சகிக்க முடியாமல், மற்ற இருபத்தியாறு பேரும் தச்சனிடம் போய் முறையிட்டனர். எல்லோரிடமும், ஒரே மாதிரி அன்பு காண்பிக்க வேண்டும் என்று கட்டளையிட்டார் மாமனார். சொன்ன பேச்சைக் கேட்காத மருமகனைக் கூப்பிட்டு, “என் கட்டளையை மீறி நடந்த உனக்கு ஷயரோகம் வரட்டும்” எனச் சாபமிட்டார்.

பயந்த சந்திரன், மாமனார் காலடியில் விழுந்து சாபவிமோசனம் வேண்டினார். “சாபம் தீர விஷ்ணுவைக் கும்பிடு” என்று சந்திரனிடம் சொல்லிவிட்டார்



தச்சன். முதலில் திருவரங்கத்தில் வழிபட்ட சந்திரன், இரண்டாவதாக இத்தலத்துப் பெருமாளை வந்து வழிபட்டாராம். அதன் பிறகுதான் தலைச்சங்காட்டில் உள்ள சந்திர புஷ்கரணியில் சென்று நீராடியுள்ளார்.

சந்திரனுக்கு இந்து என்றொரு பெயரும் உண்டு. தன் தோஷம் நீங்க இத்தலத்தை வழிபட்டதால், தனது பெயரில் இத்தலம் வழங்கப்பட வேண்டும் எனச் சந்திரன் வேண்டிக் கொண்டதனால், இத்தலம் இந்தளூர் ஆயிற்று.

பஞ்சரங்கம் என்று சொல்லக்கூடிய ஐந்து அரங்கங்களில் இதுவும் ஒன்று.

1. ஆதிரெங்கம் – ஸ்ரீரெங்கப்பட்டினம் (மைசூர்)
2. அப்பாலரெங்கம் – திருப்பேர் நகர்
3. மத்தியரெங்கம் என்ற கஸ்தூரி ரெங்கம் – ஸ்ரீரெங்கம்
4. சதுர்த்தரெங்கம் என்ற சாரங்கம் – கும்பகோணம்
5. பரிமளரெங்கம் – இந்தளூர் (மாயவரம்)

இங்குள்ள

- மூலவர் – பரிமளரெங்கநாதன், சுகந்தவனநாதன், மருவினியமைந்தன்
- தாயார் – பரிமளரெங்கநாயகி, சுகந்தவனநாச்சியார், சந்திரசாப விமோசனவல்லி
- விமானம் – வேதசக்ர விமானம்
- தீர்த்தம் – இந்துபுஷ்கரணி
- கோலம் – நான்கு புஜங்களுடன் கூடிய கிழக்கு நோக்கிய வீரசயனத் திருக்கோலம்

ஒருமுறை மதுகைடப அசுரர்கள் வேதங்களைத் திருடிச் சென்றனர். அவ்வசுரர்கள்



கைபட்டு, அவ்வேதங்கள் துர்நாற்றம் அடித்ததாம். பெருமாள் வேதங்களை மீட்டுக் கொண்டு வந்ததோடு அல்லாமல், அத்துர்நாற்றத்தைப் போக்கி, நறுமணத்துடன் வேதங்களைப் பரிமளிக்கச் செய்ததால், இவர் பரிமளரங்கன் ஆனார். நறுமணம் மிக்க வனமுள்ள தலத்தில், இப்பெருமாள் உறைந்திருப்பதால், இவர் சுகந்தவனநாதர் ஆனார். தீந்தமிழில், இவரது திருப்பெயர் மருவினிய மைந்தன்.

பொதுவாக, பெருமாள் நின்ற திருக்கோலங்களிலும், அமர்ந்த திருக்கோலங்களிலும் சங்கு சக்கரம் ஏந்தியிருப்பதுண்டு. ஆனால், இங்கு பெருமாள் நீண்ட சயனத் திருக்கோலத்தில், நான்கு புஜங்களுடனும் சங்குச் சக்கரத்துடனும் வீரசயனமாகச் சயனித்துள்ளார். நீண்ட சயனத் திருக்கோலத்தின் அளவிலே கர்ப்பக்கிரக வாசல். நேரடியாகத் தரிசனம் செய்து கொள்ளலாம்.

இப்பெருமாளின் திருவடியில் கங்கைத் தாயாரும், சிரசருகில் காவிரித் தாயாரும் அமர்ந்துள்ளனர். தலைப்பக்கத்தில் சூரியன். திருவடியில் சந்திரன். ஐப்பசி மாதம் முழுவதும் இங்கே விழாக்கோலமாக இருக்கும். கங்கையில் குளித்து நாம்நம் பாவத்தைப் போக்கிக் கொள்வோம். ஆனால், கங்கை தன் பாவத்தைக் காவிரியில் குளித்துப் போக்கிக் கொண்டதாம்.

ஒரு சமயம் கண்வ மகரிஷி கங்கையை நோக்கிப் பயணம் செய்கிறார். வழியில் மூன்று பெண்கள், தங்கள் அழகெல்லாம்

இழந்து, உருக்குலைந்து, தள்ளாடிய நிலையில் நடந்து வருகின்றனர். அவர்கள் யாரென வினவுகையில், அவர்கள் மூவரும் புண்ணிய நதிகளான கங்கை, யமுனை, சரஸ்வதி எனத் தெரிய வந்தது, பூலோக மக்கள், தங்களது பாவங்களைப் போக்கிக் கொள்வதற்காக, இப்புண்ணிய நதிகளில் வந்து நீராடியதால், அவர்களுடைய பாவச்சுமை இந்நதிகளின் மேல் படர்ந்து, இம்மூன்று நதிகளும் அழகிழந்ததால், பரிகாரம் தேடிப் போவதாகச் சொன்னார்கள்.

அவர்களிடம், கண்வ மகரிஷி, “பாரதத்தின் தென்பகுதியில் காவிரி என்னும் புண்ணிய நதி ஓடுகின்றது. அந்நதி, மயிலாடுதுறை என்னும் ஊரைக் கடந்து போகும் இடத்தில், நீங்கள் மூவரும் போய் முழுகுங்கள். உங்கள் பாவச்சுமை நீங்கிவிடும். அதுவும் துலா மாதம் என்று சொல்லப்படும் ஐப்பசி மாதம் முழுவதும் நீராடி உங்கள் பாவங்களைப் போக்கிக் கொள்ளுங்கள்” என்று கூறினார். அவ்வாறே, மூவரும் நீராடித் தாங்கள் இழந்த பொலிவைப் பெற்றனர். அதனால்தான், “கங்கை யினும் புனிதமாம் காவேரி” என்று கவிச்சக்கரவர்த்தி கம்பர் கூறுகிறார்.

அதனால், காவிரிக்குப் பெருமை சேர்ப்பதற்காக, ஐப்பசி மாதம் முழுவதும், பரிமளரெங்கப் பெருமாள் காவிரி மண்டபத்தில் இருந்து பக்தர்களுக்கு அருள் செய்கின்றார்.

திருவரங்கத்தில் காவிரி மாலவனுக்கு மாலையாய்ப் பாய்கிறாள்.

திருச்சேறையில் அரங்கனுக்கே காவிரி அன்னை ஆகிறாள்.

திருஇந்தளூரில் அவன் திருமுடியைத் தாண்டியே காவிரி ஓடுகிறாள்.

ஏகாதசி விரதத்திற்கும் பரிமள ரெங்கநாதருக்கும் ஒரு நெருங்கிய தொடர்பு உண்டு. அம்பரீஷன் என்னும் அரசர், ஏகாதசி விரதங்களை ஒழுங்காகக் கடைப்பிடித்து வருபவர். ஏகாதசித் திதியை நியமமாகப் பின்பற்றி வருவதால், இவர் தேவர்கள் வரிசையில் சேர்ந்து விடுவாரோ? என்ற அச்சம் தேவர்களுக்கு ஏற்பட்டது. ஒருசமயம் அவர் விரதமிருக்கும் நூறாவது ஏகாதசி திதி வந்தது. தேவர்கள் துர்வாச முனிவரிடம் சென்று, மன்னனின் விரதத்தைப் பங்கம் செய்யும்படி வேண்டினர்.

ஏகாதசி அன்று முழுப்பட்டினியாக விரதம் இருந்து, மறுநாள் துவாதசிதிதி முடியும் முன் உணவு உண்டு விரதம் முடிக்க வேண்டும். இதுவே நியதி. அதனால், அம்பரீஷர் உணவு உண்ண முற்படும் சமயம், துர்வாசர் அங்கு செல்கிறார். முனிவரையும் கூட அமர்ந்து சாப்பிடுமாறு அரசர் கூற, குளித்துவிட்டு வருவதாகச் சொல்லிவிட்டு நதிக்குச் சென்ற முனிவர், நதியில் நேரத்தைக் கடத்திக் கொண்டிருக்கிறார்.

இங்கேயோ மன்னர், துவாதசி திதி முடியும் முன்னர் உணவருந்த வேண்டும். அதனால், பெருமாள் தீர்த்தத்தை உள்ளங்கையால் மூன்று முறை குடித்துவிட்டு விரதத்தை முடித்துக் கொண்டார். இதையறிந்த முனிவர், தன்னை உணவருந்த அழைத்துவிட்டு, தான் இல்லாமலே விரதத்தை முடித்துவிட்ட மன்னருக்கு சாபமளித்தார். மன்னர் பரிமளரெங்கனைச் சரணடைந்து, முனிவரின் கோபத்தைப் போக்கி, மன்னருக்கு அருள் புரிகின்றார். மன்னரின் வேண்டுகோளின்படி, பெருமாள் இத்தலத்திலேயே இருந்து அனைவருக்கும் அருள் புரிந்து கொண்டிருக்கிறார். காப்பியக்கவிஞர்,நற்றமிழ்நாவலர் கவிஞர்கோ. நா.மீனவனார் “திருஇந்தளூர்” குறித்து எழுதிய ஐந்து பாடல்களின் பொருள்களும் பாடல்களும் பின்வருமாறு.

1. சந்திரனார் பெற்ற சாபத்தைத் தீர்த்தபதி இந்தளூர். இத்திருத்தலத்தில், தேவர்கள் தொழுவதற்காக, அஞ்சனமை போன்ற கரிய நிறமுடைய மேனியைக் கொண்டவன் வீற்றிருக்கின்றான். அவனைத் தொழுதால், வாழ்வில் அருளைப் பெற்றிடலாம்.

சந்திரனார் பெற்றதொரு சாபத்தைத் தீர்த்தபதி
இந்தளூர் எனச்சொல்லும் இந்தவோர் திருப்பதியில்
அந்தரத்தார் வந்துதொழ அஞ் சனமை மேனியனாய்
வந்தானைத் தொழவம்மின் வாழ்விலருள் பெற்றுய்மின்.

2. இத்தலத்தில், பரிமளரெங்கப் பெருமாள், பரிமளரெங்க நாயகியுடன் இணைபிரியாமல் வீற்றிருக்கின்றான். திருமங்கையின் பாசுரங்களில் ஊற்றெடுக்கும் தெய்வத்தமிழைப் பருகிக் கொண்டிருக்கின்றான். திருமகளை மார்பில் உடைய அப்பெருமானின் தாள் பணிந்தால், அவன் நம்மை உய்விப்பான்.

பரிமள ரெங்கனெனும் பரந்தாமன் இணைபிரியாப்

பரிமள ரெங்கநா யகியாம்நற் பாவையுடன்

திருமங்கை பாசுரமாம் தெய்வத் தமிழ்மாந்தி

ஒருமங்கை மார்புடையான் உய்விப்பான் தாள்தொழுமின்.

3. செங்கால்களை உடைய நாரை மற்றும் மீன்கள் இருக்கின்ற பல குளங்கள் சூழ்ந்திருக்கும் இந்தளூரில் வாழும் நம் கோவிந்தன் சங்கும், சக்கரமும் உடைய சாரங்கன் ஆவான். அவனுடைய திருவடியை மணங்கொண்டு போற்றினால், மங்கலங்கள் வந்து சேரும்.

செங்கால் மடநாரை சேலேந்தும் வாவிபல

எங்குமே சூழ்ந்திருக்கும் இந்தளூர் வாழுமொரு

சங்கேந்தும் கோவிந்தன் சக்கரக்கைச் சாரங்கன்

மங்கலஞ்சேர் திருவடியை மணங்கொண்டு போற்றுமினே.

4. கரிய மேகங்களை ஒத்த கருப்பு நிறம் கொண்ட கடலில், மாணிக்கத்தை உடைய பாம்பின் மேல் உறங்கிக் கொண்டிருப்பவன், இப்புவியை ஆள்பவனாகிய நம்பெருமான். அவன் தாமரை போன்ற வாயில், குழல் ஊதிக் கொண்டிருப்பவன். மருக்கொழுந்து மணக்கும் துளவ மாலையை அணிந்த மார்பழகன். அவன் திருவடியை, ஒருமுறை வணங்கினாலே உய்திபெறுதல் நிச்சயம்.

கருங்கொண்டல் கடலுறங்கும் கார்மேக மாணிக்கம்

தருமருளால் புவியாளும் தாமரைவாய் வேய்ங்குழலான்

மருமணக்கும் திருத்துளவ மார்பழகன் திருவடியை

ஒருமுறைநீர் வணங்கினால் உய்திபெறல் நிச்சயமே.

5. தனது வில்லால், அரக்கர்களை அழித்தவன் திருவடியை, இரவுபகல் எந்நேரமும் அருச்சித்து வாழ்வு பெறுவதற்காக, எல்லோரும் இந்தளூர் என்னும் இப்பதியைத் தேடி வந்தால், நல்லவனாகிய கேசவன் அனைவரையும் காப்பது நிச்சயம்.

வில்லொன்றால் அரக்கர்தம் வீறழித்தான் திருவடியை

அல்லும் பலபகலும் அருச்சித்து வாழ்வுபெற

எல்லோரும் வம்மின்காள் இந்தளூர்ப் பதிதேடி

நல்லானாம் கேசவனும் நமைக்காப்பான் நம்புமினே.

திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல்

திருமங்கையாழ்வார், இத்தலத்திற்கு, பெருமாளைச் சேவிக்க ஓடோடி வந்த போது, பூஜைகள் முடிந்து கோவில் பூட்டப்பட்டுவிட்டது. தான் வருவதற்குள் இவன் கதவடைத்துக் கொண்டானே! வந்தும் திறக்கவில்லையே என்று கோபப்படுகிறார் திருமங்கையாழ்வார். “நீர் அழகன் என்று ஊர் சொல்கிறதே, என்று பார்க்க வந்தால், கதவைத் தாழிட்டுக் கொண்டீரே? எனக்குக் காட்டாத அழகை நீரே பார்த்துக்கொள்ளும். அதுவுமில்லாமல், ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு வண்ணம் காட்டும் நீர், இந்த யுகத்தில் எவ்வண்ணம் என்று காட்ட மாட்டீரோ? நான் உமதடிமை என்று தெரிந்திருந்தும் கதவைத் தாழிட்டுக் கொண்டீரே? வாழ்ந்தே போம் நீரே” என்று வசை பாடவும் செய்கிறார். இதற்காகவே பத்து பாசுரங்களையும் பாடுகிறார். எவ்வண்ணம் எனக் காட்ட மாட்டீரோ? எனக் கேட்ட ஆழ்வாருக்குத் தான் பச்சை வண்ணம் என்று தன் திருவடிவத்தை இத்தலத்தில் காட்டி அருள் புரிகின்றார். எம்பெருமானின் திருவடிவமோ கொள்ளை அழகு! பட்டுப் பீதாம்பரத்தின் மடிப்புகளும் கைவிரல்நகங்களும்நுணுக்கமாகத் தெரியும் வடிவம்.

உள்ளத்தில் ஒரு நொடிப்பொழுதும் நீங்காதிருக்கும் ஐஸ்வர்யமே! அனுபவிக்க அனுபவிக்க இன்பமாய் இருக்கின்ற தேவகி மைந்தனே! அழகிய திருவாலிநகர் மணவாளனே! திருமாலிருஞ்சோலையில் உலாவும் யானைக் கன்று போன்றவனே! அணையாத தீபச்சுடரே! திருநறையூரில் அருள்புரியும் நம்பீ! இந்தளூர் எம்பெருமாளே! அடியேனிடம் சிறிதும் இரக்கம் காட்டவில்லையே! என ஏங்கும் திருமங்கையாழ்வார், பெரிய திருமொழியில் பாடியுள்ள பத்து பாசுரங்களில் ஒன்று

சிந்தை தன்னுள் நீங்காதிருந்த திருவே! மருவினிய

மைந்தா! அந்தணாலிமாலே! சோலைமழக் களிறே!

நந்தா விளக்கின் சுடரே! நறையூர் நின்ற நம்பீ! என்

எந்தாய்! இந்தளூராய்! அடியேற்கு இறையும் இரங்காயே!

# பெரியபுராணக் கதைக் களம்

பகுதி – 9

அன்பர்களே !

தொண்டர்தம் பெருமை அளவிடற்கு அரியது. அவர்களின் அருள் வரலாறு நம்மை நல்வழியில் நடத்தும். திருநெல்லையின் இவ்விதழில் புதுமை இணைப்பாக பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள அறுபத்து மூன்று அருந்தொண்டர் கதைகள் ஒவ்வொன்றாக காதுகளுக்கும், கண்களுக்கும் மனதிற்கும் இன்பம் சேர்க்கும் வகையில் கதைவடிவில் ஒளிபரப்பாகிறது. கேட்டு, உணர்ந்து அனுபவித்து மகிழுங்கள்.

# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

கார்த்திகை மாத சோம வாரங்களில் அருள் மிகு ஆதிமூல நாதருக்கும், படிகலிங்கத்திற்கும் சங்காபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது.

13.12.2024 அன்று திருக்கார்த்திகையை முன்னிட்டு அருள் மிகு ஆறுமுகப் பெருமானுக்கு விசேட அபிடேக ஆராதனைகள் நடைபெற்றன.

## மார்கழி மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்

| | | | |
|---|---|---|---|
| 18.12.24 | சங்கடஹர சதுர்த்தி | மாலை | விநாயகர் வழிபாடு |
| 22.12.24 | தேய்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 28.12.24 | பிரதோஷம் | | |
| 07.01.25 | வளர்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 09.01.25 | கார்த்திகை | மாலை | ஸ்ரீ ஆறுமுகர் வழிபாடு |
| 10.01.25 | வைகுண்ட ஏகாதசி | காலை | பெருமாள் சிறப்பு வழிபாடு |
| 11.01.25 | பிரதோஷம் | | |
| 12.01.25 | ஆருத்ரா தரிசனம் | மாலை | அருள்மிகு ஆனந்த நடராசர் சிறப்பு மகா அபிடேகம் |

# ஒலிப்பேழை

## கம்ப வாரிதியின் பக்கம்



திருநெல்லை இதழில் மாதந்தோறும் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களிடம் வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையை அவர்களின் குரல் வழியாகப் பெற்று திருநெல்லையில் பதிவிடுகிறோம்.

### வினா – 1

சைவம் சரியை, கிரியை, யோகம், என்பவற்றை தாண்டி ஞானத்தை அடைபவருக்கே பரமுக்தி கிடைக்கும் என்கிறதே அப்படியானால் மாணிக்கவாசகர் மட்டும் தான் பரமுக்தி அடைந்திருக்கிறாரா? பிற மூன்று மார்க்கங்களில் வந்த அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர் ஆகியோர் இன்னும் முக்தி பெறவில்லையா?

**விளக்கம்**

### வினா – 2

அகரத்தை இறைவனுக்கு உவமையாக நம் முன்னோர்கள் சொல்லியதன் காரணம் என்ன?

**விளக்கம்**

# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள ”கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்” சுமார் 44,000 க்கும் மேற்பட்ட நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.

## கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்




கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 5879 அரிய நூல்கள் இணைய நூலகத்தில் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 3000 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்கலாம்/ பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க / பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்கு தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திரு வெங்கடாசலம் அவர்களைத் (தொலைபேசி எண் 9442912649 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

நம் இணைய நூலகம் அமைந்துள்ள archives.org என்ற தளம் சமீபத்தில் முடக்கப்பட்டிருந்தது . இறையருளால் அது தற்போது மீண்டும் செயல்பாட்டிற்கு வந்துள்ள நிலையில் மேலும் பல அரிய நூல்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன.ஆகவே, நம் இணைய நூலகத்தில் இனி தங்கு தடை இன்றி நாம் பதிவேற்றம் செய்த நூல்களை பார்க்கலாம், பதிவிறக்கம் செய்யலாம்.

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

# முந்தைய இதழ்களை படிக்க அந்தந்த லிங்கை கிளிக் செய்யவும்

திருநெல்லை – புரட்டாசி

திருநெல்லை – ஐப்பசி

திருநெல்லை – கார்த்திகை

திருநெல்லை – மார்கழி

திருநெல்லை – தை

திருநெல்லை – மாசி

திருநெல்லை – பங்குனி

திருநெல்லை – சித்திரை

திருநெல்லை – வைகாசி

திருநெல்லை – ஆனி

திருநெல்லை – ஆடி

திருநெல்லை – ஆவணி

திருநெல்லை – புரட்டாசி

திருநெல்லை – ஐப்பசி